# காலக்கதிரவன்

அல்லது

# அடிமைகள் வெற்றி.

BY

V. RAMANATHAN, Devakottai.

PUBLISHED BY

AL. CT. VEERAPPA CHETTIAR,

KALLUPPATTI.





1936 Price As. 12.

# காலக்கதிரவன்

அல்லது

# அடிமைகள் வெற்றி.

இயற்றியவர்

V. இராமநாதன்,

தேவகோட்டை.

வெளியிட்டவர்

அழ. சித. வீரப்ப செட்டியார்,

கல்லுப்பட்டி.

1936. விலை அணு 12.

# முன்னுரை.

---

**வாசக நேயர்களே!**

மக்களுக்கு நெறிகளைப் புகட்டும் முறையில் மூன்று விதங்கள் முன்னரே வழக்கிலிருந்து வருகின்றன. ஒன்று, "உண்மையைச்சொல், தருமநெறியில் நட" என்பனபோன்ற அதிகாரதோரணையிலுள்ளவாக்கியங்களால் எஜமான் அடிமைகளுக்குக் கட்டளையிடுதல்போல அறிவுறுத்தும் முறை. மற்றொன்று, நண்பன் நயவுரைசொல்லி நல்வழிப்படுத்துதல்போல, "இன்னது செய்தான், இன்ன பயன் பெற்றான்" என்று கதைவாயிலாக அறிவுறுத்தும் முறை. நவீனங்கள் மக்களுக்கு அவ்வக்காலத்திற்கேற்ற நன்னெறிகளை அறிவிக்கும் முறையானது, பெரும்பான்மையும் முன்கூறப்பட்டவற்றுள் மூன்றாவதின் பாற்பட்டதாகும்.

இந்நவீனத்தின் ஆசிரியர், 'தமிழர'சில் எழுதிவரும், 'கமலகாந்தா' என்ற நவீனவாயிலாகவும், மற்றும்பல பத்திரிகைகளில் வெளியிட்டுவரும் கட்டுரைகள், கதைகளின் வாயிலாகவும், பல சபைகளில் தலைவர் முறையிலும், உபந்நியாசகர் முறையிலும் செய்து வருகின்ற சொற்பொழிவுகள் வாயிலாகவும், தனது தேசாபிமானத்தையும், சீர்திருத்த தீவிர உணர்ச்சியையும் முன்னரே பல அன்பர்களுக்கு அறிமுகப்படுத்தி அவர் மனம் கவர்ந்திருக்கும் நிலையில் மேலும் இவரைப்பற்றி எடுத்துரைக்கப் புகுவது மிகையே!

இந்த நவீனமானது, இந்தியர்கள் வியாபார முறையில் சென்றுள்ள சில இடங்களில் இப்பொழுது அனுபவித்து வரும் துயரங்களை அடிப்படையாகக் கொண்ட தென்பது வெள்ளிடை விலங்கல். ஆயினும் தற்காலப் பிரச்சினைகளாக விருந்து வரும் இளமங்கையர்களை ஆண்டில் முதியோர் களுக்கு ஆட்படுத்தும் கொடுமையும், அதனால் ஏற்படும் இன்னல்களும், விபசாரமுறை ஒழிப்பும், இன்னோன்ன பலவும் கதையில் ஆங்காங்கே அறிவுறுத்தப்பட்டிருக்கின்றன.

முக்கியமாக, கதாநாயகனை காலக்கதிரவனது உபந்நி யாச வாயிலாக, இந்தியர்களிடையேயுள்ள ஒற்றுமையின் மையே இதுபோழ்துள்ள இன்னல்கள் பலவற்றிற்குக் காரண மென்பதை தெளிவுறுத்தியமுறை இந்தியாகப் பிறந்த ஒவ் வொருவராலும் போற்றப்பட்டு அனுஷ்டானத்தில் கொண்டு வரப்படவேண்டுமென்பது இன்றியமையாத தொன்றாகும்.

இந்நவீனத்தின் நடை எளிமை வாய்ந்ததாயும், இலக்கண முறைக்கு மாறுபடாததாயும், எடுத்தவிஷயங்களை இனிதுற விளக்குவதாயும் அமைந்திருக்கிறது.

நம்நாடு இப்பொழுதிருக்கும் நிலையில் இவர்போன்ற எழுத்தாளர்கள் முன்னணிக்கு வரவேண்டியது அவசிமாத லின், இவர் பலராலும் ஆதரிக்கப்படவேண்டுமென்பது எனது வேண்டுகோள்.

Devakottai,<br>2—11—36.

(Sd.) C. R. Vasudevan,<br>Vidvan in Tamil and Sanskrit.

# காலக் கதிரவன்

— அல்லது —

# அடிமைகள் வெற்றி.

## முதல் அத்தியாயம்.

'குபேரக்குடி' என்றால் அதற்கே பொருந்தும். அவ்வளவு எழில் மிகுந்த நகரம் அது. வனப்பு மிகுந்த அந்த நகரத்தின் தென் கோடியில் ஒரு குளத்தின் முன்னிலையில் 'பங்கஜ விலாஸ்' என்ற சிறியதோர் பங்களா இருந்தது. அதன் பின் புறத்தில் ஒரு அழகிய பூங்காவனம் நிறுவப்பட்டிருந்தது. அதிலுள்ள மலர்த் தடாகமும், மா, பலா, கொய்யா முதலான பழ மரச் செடிகளும், மல்லிகை, முல்லை, இருவாட்சி, மனோரஞ்சிதம் ஆகிய மலர்ச் செடிகளும் காண்போருக்கு உள்ளும் புறமும் இன்பமளிக்கா நிரா. இன்னவை யன்ன எழில் பல மிக்க அப்பூங்காவில் சுமார் பதினாறு பதினேழு வயது மதிப்பிடத் தக்க யுவதி யொருவள் கல்லாசன மொன்றில் வீற்றிருந்த வண்ணம் ஏதோ கவலைக் கடலில் ஆழ்ந்திருந்தாள்.

இவ்வாறு வீற்றிருந்த அந்த நங்கையின் தேகம் தங்கத் தகடிழைத்து மெருகேற்றப் பெற்றதோ, அன்றி சலவைக் கல்லுருவச் சிலையோ வென ஐயுறுமாறு அவ்வளவு காந்தியாயும் வழவழப்பாயும் பொலிவுற்றது. நடுத்தர உயரம், நல்ல அழகிய பருமன், ஏற்றத் தாழ்வற்ற அவயவங்கள்.

சரிந்த தசைப் பிடிப்பு. கடைந் தெடுத்தாற் போன்ற கை கால்கள் சுருண்டு. நெளிந்து நீண்டகேசம். மயில் நேர் எழில். மான்நேர் விழி. பவளச் செவ்வாய். மூத்தாரம் போன்ற பல் வரிசை. விற்புருவங்கள். மலர்வதனம். விரிந்த மார்பு. விம்மிய கொங்கை. என்றாலும் அவள் எக்காரணத்தாலோ கொண் டிருந்த வாட்டம் அவளின் பேரழகை பாழ்படச் செய் திருந்தது.

சற்று பதுமைபோலிருந்தாள். சிறிது நிமிர்ந்தாள். சோலையை உற்று நோக்கினாள். உலகத்தை உய்விக்கும் தென்றல் சோலையில் புகுந்து அங்குள்ள தாமரைத் தடாகத் தில் மூழ்கி, குளிர்ச்சிமிகுந்து, தாமரை, மற்றும் அதன்னவை களில் கலந்து, இன்னும் மல்லிகை, முல்லை, இருவாட்சி, மனோரஞ்சிதம் ஏனைய மலர்ப் பந்தல்களில் தாவி, இனித்து மணத்தைச் சேர்த்து நறுமணங் கமழ்ந்து தன்மேல் பாய்வ தையும், அத்தென்றல், மலர்களில் உராசி, அதனால் பெருக் கெடுக்கும் தேனையும், அதனை யுண்ட சந்தோஷத்தினால் ரீங் காரம் பாடும் தேனீக்களையும், ஆடும் மயில்களையும், கூவும் குயில்களையும், பாடும் பறவைகளையும் கண்டு வெறுப்பவள் போல் தலைசாய்ந்தாள்.

இது பரியந்தம் வாய் திறவாது செய்கைகளால் சிந்தித்த அப்பைங் கொடியாள் சற்று நிலை குலைந்தாள். நிம்மதி குன் றினாள் "சிச்சீ! பெண்ணாய்ப் பிறந்தலே பெருந் துன்பம்! அதிலும் தாசி குலத்தில் பிறந்தேன்! அந்தோ! தீயது விப சாரம்! மிகக் கொடுமையானது! மகாக் கேவலமானது! சர்வ இழிவானது! அது நமது நாட்டைவிட்டு பூண்டற்றுப் போகும் நன்னாள் எந்நாளோ? அச்சண்டாளி வயிற்றிலா இப்பாவி பிறக்கவேண்டும்? அந்தோ! அவள்,—என்னைப்

பெற்ற கள்ளிதான் கெட்டாளென்றால் என்னையுமா அத் தொழிலுக்கு ஈடுபடுத்த முனையவேண்டும்? அவளுக் கனு சரணையாக கெடுமதி குடிகொண்ட மாமா ஒருவன்! அவன் அட்டகாசம், அப்பாடா, சகிக்கமுடியாது! இந்த விபசாரி— என் தாயென்ற அப்பேய் மாது ஆடும் ஆட்டத்திற்கோ அள வுண்டோ? கொடிய மதுபானம் அவளைக் குடிகொண்டு விட் டது! களியாட்டத்திற்கோ செல்லையில்லை! அவள் பாதம் படாத இடம் இருக்காது; விழிக்கொரு சிமிட்டு! வெளிக் கொரு பகட்டு! வருவோர் எண்ணற்றோர்! போவோர் கணக் கற்றோர்! அந்தோ! தெய்வமே! பெண்களுக்கு கற்பன்றோ பிரதானம்! அதன்றோ அழகு! என்னைப் பெற்ற இக் காம நோய் பிடித்த பேய் கற்பை விற்றாள்! விற்கின்றாள்!! இன் னும் விற்பாள்!!! அதோடு நிற்கலாகாதா? என்னையும் கெடுக்க முனைகின்றாள்.

ஏ, கொடிய பணமே! உன்னாலன்றோ இத்தொழில் மலிந்தது. நீ பாதகச் செயலுக்குரியோய்! அடாக் காரியங் களுக்கு அடிகோலி! ஏ கடவுளே! இது பரியந்தம் எனது சாமர்த்தியத்தால் என் கற்பைக் காப்பாற்றினேன். இனிக் காப்பதுதான் பாரம்! காப்பாற்ற மாட்டாயோ! காருண்ய மூர்த்தியே! விபசாரம் நமது நாட்டை விட்டகலவேண்டும்! வேறென்னவேண்டும்? இதற்கு பொதுஜன ஆதரவு பூர்த்தி யாகவேண்டும்! மற்றென்ன வேண்டும்? காருண்ய சர்க்காரின் கவனம் இதற்குவேண்டும்!'' என்றவாறு தன்னுள் கூறி, தனது நிலையை எண்ணி வருந்திக் கண்ணீர் வடித்துக்கொண் டிருந்த பொழுது, "அடி ஜெயவதனி!'' என்று கூப்பிடும் குரல் பங்கஜ விலாசத்திலிருந்து கிளம்ப, சோர்வுற்று வீற் றிருந்த நங்கை சடுதியிலெழுந்து சீக்கிரத்தில் பங்களாவினுள் நுழைந்தாள்.

குபேரக்குடி தாசிகளில் தலை சிறந்தவள் மோஹனும்பாள். இவளுக்கு வயது சுமார் முப்பத்தி ஐந்திருக்குமென்றாலும் பருவத்திரு உருவில் ஒரு பக்குவ நங்கைபோல் விளங்கினாள். இவளின் வெளிப் பகட்டும், விழிச் சிமிட்டும், முகவெட்டும் எண்ணற்ற பெரியார்களை நிலைகுலையச் செய்தன. இப்பேர்ப்பட்ட புண்ணியவதியின் வயிற்றில்தான் கள்ளி வயிற்றில் அகில் பிறந்தாற்போன்று நம் கதாநாயகி ஜெயவதனி மகளாய்ப் பிறந்து கற்பையே கனகபூஷணமாக மதிக்கலானாள். என்றாலும், தன் தாயின் தொழில் தூண்டுதலை யெண்ணி மனம் வாடி, இனித் தன் கற்பைக் காப்பாற்றுவதெங்ஙனம்? என்று எண்ணி ஏங்கிய நிலையில் அழைத்தாள் அவளின் தாய் மோஹனும்பாள்.

ஆதவன் அஸ்தமித்த நேரம். உள் நுழைந்த ஜெயவதனி தன் தாயையும் கூட்டிக் கொடுக்கும் யாமா சுந்தரராஜ அய்யங்காரையும் ஒருவர் பக்கத்தில் ஒருவர் உல்லாசமாக இருப்பதைக் கண்டாள். அவ்வாறு கண்டதுமே அவளின் அண்டம் கலங்கியது. பூமியைப் பார்த்த வண்ணம், "ஏனம்மா அழைத்தாய்?" எனக் கேட்டாள்.

மோஹனும்பாள்:—என்னடி அவ்வளவு மமதை? நிமிர்ந்து பேசக்கூட முடியாமல் என்னடி கிழித்து விட்டாய்?

ஜெயவதனி:—அம்மா! ஏன் இவ்வளவு கோபம்? நான் என்ன குற்றம் செய்தேன்?

மோஹனும்பாள்:—குற்றமா குற்றம்! திமிர் கொண்ட கழுதை! உனக்கு யாரடி கொட்டி யழுவது? வேளா வேளையில் நாய் மாதிரி சாப்பிட இங்கென்னடி சம்பாத்தியம் நடக்கிறது? மற்றும் நானென்னடி ஊழியக் காரியா? வீட்டு வேலையில் எருமை மாட்டிற்கு கிஞ்சிற்றேனும் கவலையே கிடையாது!

ஜெயவதனி:—"அம்மா! அப்படி யெல்லாம் தூஷணை செய்ய வேண்டாம். வேண்டுமானால்....நான்...." என்று கூறும் பொழுது,

மாமா குறுக்கிட்டு, "அடி மோஹனம்! என்னடி உளறு கிறாய்? குழந்தையிடத்தில் ஏன் இவ்வளவு கோபம்? அவ ளென்ன அறியாதவளா? தெரியாதவளா?" என்று கூறும் பொழுது,

"ஐயா! நீர் வாயை மூடும்! வேங்கை பதுங்குவது பாய் வதற்கென்பதை நான் நன்கறிவேன்! உமது அரட்டலும் புரட்டலும் என்னிடம் வேண்டாம்! உமது வலைக்குட்பட்ட வள் நானல்ல! நீர் பரிந்து பேசுவதின் அர்த்தத்தை உணர் வேன்" என்று ஜெயவதனி கண்களில் பொறி பறக்க கூறினாள்.

இதனைக் கேட்ட மோஹனம்பாள், "என்னடி மெத்த ஆர்ப்பாட்டம் செய்கின்றாய்! மேல் மாடிக்குச் சென்று எனது சயனக் கிரகத்தினுள் மேஜைமேலிருக்கும் வெள்ளி டம்ளரை எடுத்துவா" எனக் கட்டளையிட்டாள்.

அவ்வாறே ஜெயவதனி படிக்கட்டுகளைக் கடந்து சயனக் கிரகத்தினுள் நுழைந்தாள். அந்தச் சந்தர்ப்பத்தில், கீழி ருந்த மோஹனம்பாள், என்றுமில்லாத முக மலர்ச்சியுடன் ஒரு விசைக் கருவியை அழுத்தினாள். ஜெயவதனி புகுந்த சயனக் கிரகத்தின் கதவுகள் தானே பூட்டிக் கொண்டன. ஒன்றும் விளங்காத ஜெயவதனி தூண்டிலில் அகப்பட்ட மீன் போல் துடி துடித்து அந்த அறையில் அங்கு மிங்கு மோடி னாள்.

அறையினுள் ஒரு மேஜை போடப்பட்டிருந்தது. அதன் மேல் காகிதங்களும் எழுது கோல்வகையறுக்களு மிருந்தன.

இரண்டு வெள்ளி டம்ளர்களில் கற்கண்டிட்டுக் காய்ச்சிய பாலிருந்தது. மின்சார தீபம் பிரகாசித்தது. காற்ருடிகள் 'விர் விர்' என்று சுழன்று கொண்டிருந்தன. சுவரெங்கும் காம விகாரப் படங்களும் பெரிய பெரிய நிலைக் கண்ணுடிகளும் வைக்கப்பட்டிருந்தன. ஒரு ஸ்பிரிங் கட்டில். அதன் மேல் வெல்வெட்டு மெத்தை. அதன்மேல் மணம் மிகுந்த மல்லிகை மலர் மஸ்லின் துணியால் போர்த்தப் பட்டிருந்தது. அருகில் கிடந்த ஆசனமொன்றில் சுமார் ஐம்பது வயதுக் கிழவர். இவை யாவையும் கண்ட ஜெயவதனி தான் காண்பது கனவோ நனவோ என்றெண்ணினுள். அப்பொழுது அங்கிருந்த ஆடவர், "பெண்ணே! ஏன் வெட்கப்படுகின்ருய்?" எனக் கேட்டார்.

இதனைச் செவிமடுத்த ஜெயவதனி, தான் காண்பது கனவல்ல வென்பதைத் தெரிந்தாள். இந்தச் சந்தர்ப்பத்தில் அவள் கொண்ட மனோ வேதனையை எழுதுவதென்ருல் நம்மால் சாத்தியமாகாது.

ஆடவர்:—கண்மணி! இப்படி வா! என்னை சோதனை செய்யாதே! சகிக்க முடியாது.

ஜெயவதனி:—என்ன? சோதனையா? அதெல்லாம் என்னிடமில்லை. உண்மையைக் கூறுங்கள்.

ஆடவர்:—அப்படியானுல் உண்மையில் நீ ஒன்றையும் அறியாயோ?

ஜெயவதனி:—சத்தியமாக ஒன்றையும் அறியேன்.

இதனைக் கேட்ட ஆடவர் சற்று சிந்தித்து, "ஆம்! மோசம் போனேன்! அந்தப் படுபாவி மாமா என்னை ஏமாற்றி விட்டான்! போகட்டும். இப்பொழுது அதனைச் சிந்தித்துப்

பயனென்ன? என் மனதைக் கொள்ளை கொண்ட மாதரசி! நான் யாரென அறிவாயோ?" எனக் கேட்டார்.

ஜெயவதனி:—அறிவேன்! தாங்கள் தானே இவ்வூர் முனிசி பல் சேர்மன் செட்டியார்?

ஆடவர்:—சபாஷ்! நீ மகாக் கெட்டிக்காரி! நான் நினைத்தால் இவ்வூரில் என்ன வேண்டுமென்றாலும் செய்யலா மல்லவோ?

ஜெயவதனி:—அதிலென்ன ஆக்ஷேபணை! நீங்கள் நினைத்தால் ஆகாதது முண்டோ! இந்த வீட்டையே உடைக்க நினைப்பினும் செய்வீர்கள்! என் தாயையே ஊரைவிட் டகற்ற எண்ணினும் செய்வீர்கள்!

ஆடவர்:—உன்னையும் அவ்வாறு செய்ய முடியுமல்லவா?

ஜெயவதனி:—அது தான் முடியாத காரியம்.

ஆடவர்:—ஏனோ?

ஜெயவதனி:—நான் ஒரு விபசாரியல்ல வென்பது ஞாபகத்தி லிருக்கட்டும்.

ஆடவர்:—உண்மையாகவா?

ஜெயவதனி:—ஆம்.

ஆடவர்:—இன்னும் கொஞ்சம் அதிகப் பணம் கொடுத்தால்?

ஜெயவதனி:—உங்கள் பணத்தை நாய்க்குப் போடுங்கள்.

ஆடவர்:—அப்படியானால் நான்?

ஜெயவதனி:—வாய் பேசாமல் வந்த வழியே போகவேண்டி யது தான்.

ஆடவர்:திடமாகவா?

ஜெயவதனி:—அதிலென்ன சந்தேகம்!

ஆடவர்:—அது முடியாத காரியம்!

ஜெயவதனி:—பின்?

ஆடவர்:—பலவந்தம் செய்தால்?

ஜெயவதனி:—அதற்குள் நான் உயிர் விடுவேன். அன்றியும் விபசார ஒழிப்பு சட்ட திட்டங்களை கொண்டு செலுத்த வேண்டிய முனிசிபல் சேர்மனாகிய தாங்களே அதனைக் கைவிட்டு காமநோய் கொண்டால் இதினும் கேவலம் வேறுதானுளதோ?

இவ்வாறு கூறக் கேட்ட சேர்மன் செட்டியாருக்கு சற்று மனக் கிலேச மேற்பட்டது. ஒரு வேளை உயிரை மாய்த்துக் கொள்வாளோ வென்றெண்ணிப் பயந்தார். கைக்கெட்டியும் வாய்க் கெட்டாததை நினைந்து நொந்தார். பின்பு பலவந்தம் பயனளிக்கா தென்றெண்ணி நயவுரையாட முனைந்து, "ஜெயம்! இப்படி வா?" என்று அவள் பெயரைச் சுருக்கி அழைத்தார்.

"உங்களுக்கு ஜெயம் இல்லை. தோல்விதான்" என்று நன்னயமாய் மொழிந்தாள் நங்கை.

"போகட்டும். இப்படி வா!" என்றார். அவளும் சற்று திடங் கொண்டு, அருகில் சென்று, நமஸ்கரித்து, "ஐயா! அடியாளை மன்னிக்கவேண்டும். நான் கேட்க விரும்பும் கேள்விகளுக்கு மறுக்காமல் தயவு செய்து பதில் கூறுங்கள்." என்று வேண்டினாள். அவரும் இசைந்தார். எனவே,

"தங்கள் மனைவி என் போல் ஒரு யுவதிதானே?" என்றாள்.

ஆடவர்:—ஆம்.

ஜெயவதனி:—அவ்வம்மையா ரிருக்க இப்பொழுது நீங்கள் வேற்று மாதாகிய என்னை விரும்பி வந்தாற்போல், உங்

கள் மனைவி உங்களை விட்டு வேறொருவரை நாடிச்சென்ருல் உங்கள் நிலை எப்படியாகும்?

இதனைக் கேட்ட சேர்மன் செட்டியார் சற்று வெட்கினர். ஜெயவதனி மேலும் அவரை வருத்தத்திற் குள்ளாக்க வெண்ணுமல், மேஜை மீதிருந்த பால் டம்ளர்கள் இரண்டையும் எடுத்து ஒன்றை அவர் கைக்கொடுத்து அருந்தக் கூறினள். அவரும் அவ்வாறே செய்தார். மற்றொரு டம்ளரையும் அவரிடம் கொடுத்தாள். 'உனக்கு' என்ருர். 'எனக்கு வேண்டாம். அதனையும் பருகுங்கள்' எனவே அதனையும் குடித்தார்.

"ஐயா! இரண்டு டம்ளர் பாலிலும் என்ன வித்தியாசம் கண்டீர்கள்?" எனக் கேட்டாள்.

ஆடவர்:—இரண்டு டம்ளர் பாலும் ஒரே மாதிரிதானிருந்தது. ஏன்? என்ன விசேஷம்?

ஜேயவதனி:—நன்று! உங்கள் மனைவியையும் கடவுள் தான் படைத்தார். என்னையும் அதே கடவுள்தான் படைத்தார். கிழப் பருவத்தில் நீங்கள் மறு கலியாணம் செய்ததினல் அவளும் ஒரு யுவதி. நானும் ஒரு யுவதி. அப்படியிருந்தும் அறிவுக் களஞ்சியமாகிய தாங்கள் இங்கென்னை நாடி வருவானேன்?

செவி மடுத்த செட்டியாருக்கு ஞானம் உதயமாகிவிட்டது. தனது நிலையையும் செயலையும் நினைந்து வருந்தினர்' ஜெயவதனியை நோக்கி, தளர்ந்த குரலில், "பெண்மணி!" என்ருர்.

இதுவரையில் பலவாறு பிதற்றிய செட்டியார், இப்பொழுது சாந்த குணமுடன், 'பெண்மணி' என்றழைத்

ததுமே, ஜெயவதனி தன் காரியம் கைகூடிவிடுமென மகிழ்ந்தாள். "என்னை மன்னிக்கவேண்டும். அறியாமல் செய்த பிழையை பொறுத்தருளவேண்டும். நீ வயதில் சிறியவளே யாயினும் அறிவில் முதியவள். நான் அதில் கடைச் சிறியேன்" எனக் கூறினார்.

"ஐயா! அதனை நினைந்து வருந்தாதீர்கள். தாங்கள் எனக்கொரு உதவி செய்வீர்களா?" எனக் கேட்டாள்.

"என்னால் கூடிய எவ்வித உதவியையும் செய்யத் தயார். தாராளமாய்க் கேள்" என்றார்.

"தாங்கள் முனிசிபல் சேர்மன். எனவே அதிகார தோரணையில் எது வேண்டுமாயினும் செய்வீர்கள். ஆகவே, என் தாயை விபசாரத் தொழிலை விட்டொழிக்கும்படியும் அல்லது இவ்வூரை விட்டோடும்படியும் அத்துடன் சண்டாள மாமாவைக் கடிந்தும் ஒரு கடிதமெழுதித் தரவேண்டும்" என்று வேண்டினாள்.

அவ்வாறே சேர்மன் செட்டியார் மேஜை யருகிலமர்ந்து, எழுதுகோலை எடுத்து,

குபேரக்குடி,
9 செப்டம்பர் 1936.

மிஸ். மோஹனாம்பாள்,
குபேரக்குடி.

நீ விபசாரத் தொழிலை அடியோடு விட்டுவிடவேண்டும். வேண்டுமானால் ஒரு புருஷனை மணந்து இல்வாழ்வில் ஈடுபடு. இப்பொழுது உன்னிட மிருக்கும் மாமா ஸ்ரீமான் சுந்தரராஜ அய்யங்காரை இனி அத் தீத்தொழிலில் ஈடுபடவேண்டா மென்று எச்சரித்து அகற்றிவிடு. இவற்றிற்கு நீ உட்பட்டு

நடக்காவிட்டால் விபசார வில்க்கு சட்ட மூலம் உனக்கு ஆபத்து விளைவது நிச்சயம்.

இப்படிக்கு,
அருணாசலம் செட்டியார்.
முனிசிபல் சேர்மன்.

என்று வரைந்து அதனை ஜெயவதனியிடம் கொடுத்தார். அப்பொழுது விசைக் கதவுகள் தானாகத் திறந்தன. சேர்மன் வெளிப்பட்டார். மோஹனாம்பாள் எதிர்ப்பட்டு "காரியம் எப்படி ?" என்று கேட்டாள். "நலம் தான். ஜெயவதனியிடம் வாங்கிக் கொள். கொடுத்திருக்கிறேன்." என்று கூறி கீழ்வந்து வெளி நடந்தார்.

மோஹனாம்பாள், சேர்மன் மகிழ்ந்து ஜெயவதனியிடம் ஏதும் பணம் கொடுத்திருப்பார் என்றெண்ணி, அவளை யணுகி, "என்னடி தந்தார்?" என்று கேட்டாள். ஜெயவதனி கடிதத்தைக் கொடுத்தாள். மோஹனாம்பாள் அதனைப் பிரித்துப் படித்தாள். அந்த சமயம் மாமாவும் அங்கு வந்தார். விஷயத்தை அறிந்த மாமா, "உன்னால் என் பிழைப்பில் மண் வீழ்ந்தது" என்று வருந்திய வண்ணம் அகன்று விட்டார். மோஹனாம்பாள் ஜெயவதனியின் சிகையைப் பிடித்து பலபடி தூற்றி, "அடி சிறுக்கி! உன்னை விட்டேனா பார்? இவ்வூரில்லா விட்டால் வேறூருமா அஸ்தமித்துவிட்டது! உன்னை எக்கதிக் குள்ளாக்குகின்றேன் பார்!" என்று கூறி நாயாய்க் குரைத்து கழுதையாய்க் கத்தினாள்.

அன்றிரவு படுக்கைக்குச் சென்ற ஜெயவதனிக்கு தூக்கம் பிடிக்கவில்லை. ஏதேதோ எண்ணினாள். என்னசெய்வதென்று ஒன்றும் புலனாகவில்லை. இனியும் தான் தன் தாயுடன் தங்கினால் எப்படியும் கற்புக்கு பங்கமேற்படுவது

திண்ணமென எண்ணினுள். "இனியுமா அவளுடன் தங்கு வது? என்ன மடத்தனம்! தாமதித்தால் ஆபத்தேற்படுவது திண்ணம்! நான் பிறந்த இந்தத் தாய்நாடு இன்று தாழ்வுற் றிருக்கின்றது. வறுமை மிஞ்சிக் கிடக்கின்றது. விடுதலை தவறித் தத்தளிக்கின்றது. பாழ்பட்டுவிட்டது. அதற்காக எத்தனையோ பெரியார்கள் உடல் பொருள் ஆவியனைத்தை யும் தத்தம் செய்திருக்கிறார்கள்! இப்பொழுதும் இந்திர போகத்துடன் வாழ ஹேதுவுள்ள எண்ணற்ற பெரியார்கள் தாய்நாட்டின் விடுதலைக்காகவும் அயல் நாட்டிலுள்ள நம் அடிமை மக்களுக்காகவும் சிறைவாசம் செய்கின்றனர்! அப் படி யிருக்க, நான் ஏன் இந்த வெற்றுடம்பை புகழுடம்பாக்க லாகாது? ஆனல் முடியாத காரியம்! இந்த அபலைப் பேதைப் பெண் ஜன்மத்தால் என்ன செய்ய முடியும்? இதென்ன சிந் தனை? பாரத நாட்டின் விடுதலைக்காக உடல் பொருள் ஆவி யனைத்தையும் தத்தம் செய்து வாசஸ்தல பேதத்தால் உயிர் துறந்த கமலா நேரு யார்? இந்த இந்திய நாட்டில் உதித்த என் போன்ற ஒரு பெண்ணன்றோ! பெண்கள் நினைத்தால் ஆகாதது முண்டோ? நான் ஏன் அப்பணியில் ஈடுபட லாகாது? அப்பணியே எப்பணியிலும் சிறந்தது! அதுவே சரி! இனித் தாமதிப்பது சரியல்ல," என்று தனக்குள் சிந் தித்து முடிவு கொண்டாள். மெல்ல எழுந்தாள். வெளி வந்தாள். தன் கால்களின் போக்கில் மனத்தைச் செலுத்தி நடந்தாள்.



## இரண்டாம் அத்தியாயம்.

இந்திய மக்களை மிருகங்களிலும் கேவலமாக நடத்தி வரும் பல அயல் நாடுகளில், இந்தியாவின் தென் பகுதி

யில் சுமார் நானூறு மைல்களுக் கப்பாலுள்ள 'தௌலத் தீவும் ஒன்று. பாரத நாட்டிற்கு மிகவும் அண்மையிலுள்ள இத்தீவு இடையே சிறியதொரு கடலால் பிரிக்கப்பட்டுள்ளது. இதன் ஜனத் தொகையில் சுமார் ஆறிலொரு பகுதியினர் இந்தியாவிலிருந்து அங்கு குடியேறி அதனையே தங்கள் தாய்நாடு போல் கௌரவித்து வாழலாயினர். வியாபார முறையிலும் குடியேற்ற முறையிலும் இத்தீவு இந்தியாவுடன் மிகவும் சம்பந்தப்பட்டுள்ளது. என்றாலும் இங்குள்ள சுதேச மக்களின் தலைவர்கள் சிலர் இந்தியர்களை நாட்டை விட்டோட்டும் மனப்பான்மையுடன் இருந்தனர்.

இத்தீவில் சுமார் பத்துலக்ஷம் ஏக்கர் விஸ்தீரணத்திற்கு தென்னை பயிரிடப்பட்டுள்ளது. இதில் அநேகமாக பாதிக்குக் குறைவில்லாமல் குடியேறிய இந்தியர்களுக்குச் சொந்தம். தென்னைக் கடுத்தபடி ரப்பரும், தேயிலையும் இத்தீவின் முக்கிய பயிர்த்தொழில். இவைகளில் பெரும் பகுதியில்லாவிட்டாலும் சிறு பகுதி இந்தியர்களுக்குச் சொந்தம். இவ்வாறாக அத்தீவில் சொத்துரிமை கொண்ட இந்தியர்கள் சுதேச மக்களுடன் சகோதரப் பான்மையுடனும், அவர்களின் வியாபாரத்திற்கு பணம், மற்ற உதவிகளைச் செய்தும் ஒத்தாசை புரிந்து தாங்களும் அதன் மூலம் லாபமடைந்து வந்தனர். என்றாலும் ஒரு சில சுதேசத் தலைவர்கள் நம்மவர்கள் மேல் தப்பபிப்பிராயம் கொண்டு நாட்டை விட்டோட்ட எண்ணலாயினர்.

அவர்கள் வெறுத்ததற்குக் காரணம் இல்லாமலுமில்லை. முன்னாளில் நம் இந்தியர்களில் ஒரு சாரார் பண லேவாதேவியால் தக்க ஊதியமடைந்தனர். ஆனால் நமது கதை தொடங்கும் வேளையில் அது முற்றிலும் மாறுபட்டுவிட்டது. எனவே, குடியேறிய மக்கள், அந்த நாட்டைவிட்டு வரவும்

தயார். ஆனல் தங்களுக்குச் சொந்தமான சொத்து சுகங்களை வீணில் இழக்க யார் மனம்தான் சம்மதிக்கும்? அன்றியும், அத்தீவு சகலவிதமான கைத்தொழிலுக்கும் இடமளிக்கும் வண்ணமிருந்தது. இங்கு சீனி உற்பத்தி, நூல் உற்பத்தி, கருப்பட்டி உற்பத்தி, கரும்புப் பயிர்த் தொழில், இன்னும் இன்னவையன்ன அதிகம்.

பல்வளம் நிறைந்த இந்தத் தீவை, வில்சன் என்பவர் ஆகூி செய்து வந்தார். இவர் காலத்தில் அங்குள்ள நம் இந்தியர்கள் கொடிய சட்ட திட்டங்கட் குட்படுத்தப்பட்டு கேவலம் மிருகங்களைப் போல் நடத்தப்பட்டனர். இவர்களுக்கு 'இம்' என்ருல் சிறைவாசம். 'ஏன்' என்ருல் வனவாசம். இதுபோன்ற இன்னும் பல கொடுமைகள் வழங்கப்பட்டன. இத்தனையும் பொறுத்தனர் நம் ஏழை மக்கள். ஆனல் இவர்கள் ஒன்றுபட்டு ஒற்றுமையுடனிருந்திருப்பின் இவ்வளவு கஷ்ட நிஷ்டூரங்களுக்கு ஆளாகவேண்டுவதில்லை என்று திட்டமாகக் கூறலாம்.

இவ்வளவு சீரும் சிறப்பும் பெற்ற தௌலத் தீவில் 'ஆண்டிவால் சந்து' என்ற ஒரு தெருவில் ஒரு விசாலமான பங்களாவின் நடு ஹாலில் மேஜைகளும் நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. மேஜைகளின் மேல் அயல் நாட்டாரின் அமிர்தமான குடி வகைகள் நிரப்பப் பட்டிருந்தன. மாலை சுமார் ஐந்து மணியிருக்கும். ஆங்கில முறைப்படி ஆடைகளணிந்த நால்வர் அங்கு வந்தமர்ந்தனர். சற்று நேரத்தில் ஆடம்பரமாக ஆடையணிந்த மற்ருெரு ஆடவன் அங்கு வந்தான். வந்தவன் முன்னர் வந்து அமர்ந்திருந்தவர்களுக்கு வந்தனம் கூறினன். தானும் ஒரு ஆசனத்தில் அமர்ந்து, மற்ற நால்வர்களையும் நோக்கி, "அன்பர்களே!

இன்று நமது அரசர் அவசியம் வருவார். எனவே இந்தியர் களை இத்தீவை விட்டகற்றுவதற்கு ஒரு முடிவான அபிப் பிராயத்தைக் கொள்ளவேண்டும்'' என்றான். இதனைக் கேட்ட மற்ற நால்வரில் ஒருவன்,

''ஜான்சன்! நல்லது! மிகவும் முக்கியமான விஷயம். முடிவு தெரிய வேண்டுவது மிகவும் அவசியம். நாம் சற்று அசிரத்தையாக விருந்தால் தலைவர்களாகிய நம்மையே இங் குள்ள இந்தியர்கள் விழுங்கி விடுவார்கள்'' என்றான்.

மற்றொருவன், ''ஆம்! ஜான்சன்! அரசர், நீ சொன்னால் ஒரு பொழுதும் நிராகரிக்கமாட்டார். உனது வாக்கு அவ ருக்கு தேவவாக்கு! உடனே உத்தரவு பிறப்பித்து விடுவார்'' என்றான்.

இன்னொருவன், ''சரியான யோஜனை! குடியேறிய இந் தியர்கள் இந்த நாட்டை விட்டகலவேண்டும். அப்பொழுது தான் பொதுவாக நாட்டிற்கும், சிறப்பாக நமக்கும் க்ஷேம முண்டு'' என்றான்.

வேறொருவன், ''அப்பா ஜான்சன்! இந்தியர்கள் நல்ல வர்கள். கள்ளங் கபடற்றவர்கள். மகா நாணயஸ்தர்கள். அவர்களை ஓட்ட ஏன் சதியாலோசனை செய்கின்றீர்கள்? ஐயோ! பாபம்! அவர்களின் இனத்தார்களும், சுற்றத்தார் களும், தோழர்களும் பொன் போட்டால் பொன் விளையும் நாடாகிய பாத கண்டத்தை அந்நியாதிக்கத்தில் விடுத்து படும் கஷ்டங்களை கண்ணால் காணவும் சகியாது! அவ்வளவு கொடுமை! இந்த நிலையில் இங்கு குடியேறிய அந்நாட்டு மக் களை நமது சர்க்காரும் கொடிய சட்ட திட்டங்களால் அடக்கி வருகிறது. அதனையே சகிக்கமாட்டாமல் அவர்கள் துன் புறும் வேளையில் நாம் நாட்டையே விட்டோட்ட சதியா

லோசனை செய்வது முறையாகாது. அன்றியும் ஒரு வேளை நமக்கே தீங்காக முடிந்தாலும் முடியும்! இந்தியர்கள் இங்குள்ள ஜனத்தொகையில் ஆறில் ஒரு பங்கென்பதால் உதாசீனமாக எண்ணலாகாது. ஒரு வேளை அவர்களின் உதவியால் வாழும் நம் சுதேச மக்களும் அவர்களுடன் சேர்ந்து கொண்டால் நம் கதி அதோ கதிதான். அவ்வாறு நமக்கு ஆபத்தேற்பட்டால், இங்குள்ள இந்தியர்கள் ஜெயகோஷத்துடன், பாரத நாட்டில் உறங்கும் தங்கள் சமூகத்திற்கு ஆக்க மளிப்பார்கள். எனவே அவர்களும் வீறுகொண்டெழுந்து வெற்றி பெறுவார்கள். இப்பொழுது அவர்கள் ஒற்றுமையின்றி யிருப்பதால்தான் இக்கதியிலிருக்கிறார்கள். ஆதலால் நாம் செய்யும் சூழ்ச்சியால் நமக்கு ஆபத்தும், இந்தியர்களுக்கு எங்கும் பூரண வெற்றியும் ஏற்படினும் ஏற்படலாம். ஆகலால் யோஜித்துச் செய்வதுதான் நலம்'' என்றான்.

இதனைக் கேட்ட ஜான்சனுக்கு கோபம் பொங்கியெழுந்தது. ''சிச்சி! இவன் யோசனையைக் கேட்டால் முன்னுக்கு வருவது முடியாத காரியம்! எப்படியும் இந்தியர்களை நம் நாட்டை விட்டோட்டியே யாகவேண்டும்! நான் சொன்னால் அரசர் ஏற்காது போகமாட்டார். அன்றி அவர் மறுத்தால் நிச்சயமாக அவர் நட்பைத் துறந்து கிளர்ச்சி செய்வேன். அப்படிச் செய்து இதில் வெற்றி பெறாவிட்டால் நான் ஜான்சனல்ல'' என்று உரத்துப் பேசி மேஜையில் ஒரு குத்துக் குத்தி தனது வீரத்தைக் காட்டினான். அம்மேஜை மேலிருந்த சாராயப் புட்டி அதிர்ச்சியால் சத்தமிட்டது. அப்பொழுது குடியின் ஞாபகம் வரவே, மற்றவர்களை நோக்கி. ''தோழர்களே! அது கிடக்கட்டும். இப்பொழுது குடியுங்கள்'' என்றான்.

குடித்தனர். குடி வெறியால் அனைவரும் விழுந்தனர். வெறியின் மிகுதியினுல் ஒருவரோ டொருவர் கட்டித் தழுவி ஆர்ப்பரித்தனர். அத்தருணத்தில் மன்னர் சாதாரண உடையில் அங்கு நுழைந்தார். இவர் வந்ததைக் கண்ட ஜான்சன் முகமன் கூறி வரவேற்றுபசரித்து ஆசனங் கொடுத்தமரச் செய்து பானங்கள் கொடுத்துப் பருகச் செய்தான். பின்பு அனைவரும் சிகரெட் புகைக்கலாயினர். இப்பொழுது மன்னர்,

"மிஸ்டர் ஜான்சன்! மிக்க சந்தோஷம்! எப்படி சுகம்?" என்றுர்.

ஜான்சன்:—"தங்களிடம் அந்தரங்கக் காரியதரிசியாக இருக்கும் பொழுது எனக்கு சுகத்திற் கென்ன குறைவு? சகலமும் தாங்கள் தான்"

மன்னர்:—நன்று. உம்மை நான் அவ்வாறு கொண்டது எமது அதிர்ஷ்டம்! சபாஷ்! சாராயம் மிகவும் நன்றுயிருந்தது! மெத்த சந்தோஷம்! ஆனுல் குடிக்கக் கூடாது என்று பிரசாரம் செய்கிறுர்களே, குடிப்பது கெடுதல் தாமோ?

ஜான்சன்:—"இது புதுமை! அவர்கள் அனுபவ மற்றவர்கள்! குடித்திருந்தா லல்லவோ அதன் அருமை பெருமை அவர்களுக்குத் தெரியும். அன்றியும் குடியாத வீடு விடியாது. குடியே தெய்வம்! குடியே தாய்! குடியே தந்தை! குடியே மாமன்! குடியே மாமி! குடியே உடல்! குடியே உயிர்! குடியே ஆதி! குடியே அந்தம்! குடிக்கவேண்டும்! கட்டாயம் குடிக்கவேண்டும்! ஒவ்வொருவரும் குடிக்கவேண்டும்!" என்று ஆர்ப்பாட்டம் செய்து மேஜையிலிருந்த புட்டிகளில் ஒன்றை எடுத்து ஒரே மூச்சில் குடித்தான்.

மன்னர்:—அப்படியா? மிக்க சந்தோஷம்! வேறென்ன விசேஷம்?

ஜான்சன்:—வேறொன்றுமில்லை. இப்பொழுது நாகரீகக் குடி போதுமான அளவு பெருகி யிருக்கிறது. ஆனால் நாட்டுக் குடிமட்டும் மிகக் குறைவு. காரணம் கள்ளுக் கடைகளின் எண்ணிக்கை மிகவும் குறைவு. ஆதலால் நமது ராஜதானியில் இன்னும் நூற்றுக் கணக்கான கள்ளுக் கடைகளுக்கு புதிதாக லைசென்ஸ் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

மன்னர்:—இப்பொழுதே குடித்தவர் சண்டை கோர நிலையிலிருக்கிறது. இன்னும் புதிதாய் ஏற்பட்டால்?

ஜான்சன்:—இதுதானா பிரமாதம்? கடைக்கிரண்டு போலீஸ் வீரர்களை நிறுத்தினால் சரியாய் விடும்.

மன்னர்:—சபாஷ்! உமது புத்திக்கு மெச்சினேம். நாளையே ஏற்பாடு செய்வோம். வேறென்ன விசேஷம்?

ஜான்சன்:—வேறொன்று மில்லை. நம் நாட்டின் விஸ்தீரணத்திற்கு இப்பொழுதுள்ள ஜனத்தொகை மிகவும் குறைவு. எனவே ஜனத்தொகையை அபிவிருத்திசெய்யவேண்டும்.

மன்னர்:—அதற்கென்ன செய்ய வேண்டும்?

ஜான்சன்:—இதுதானா பிரமாதம்! பெண்கள் ஒவ்வொருவரும் குறைந்தது ஒரு டஜன் பிள்ளைகளைப் பெறவேண்டும். இல்லாவிட்டால் தண்டனை விதிக்கப்படும். என்று ஒரு சட்டம் இயற்றினால் போதும்.

மன்னர்:—அந்நிய நாட்டினர் கர்ப்பத் தடை முறையைக் கைக்கொள்ளும் பொழுது நாம் அவ்வாறு சட்ட மியற்றினால் முறையாகுமா?

ஜான்சன்:—முறை யென்ன முறை? அவர்கள் நாட்டில் உண்ண உணவில்லை. உடுக்க உடையில்லை. நிற்க நிழலில்லை. ஆனதால் பிள்ளைகளைப் பாமரித்தல் முடியாமற் போகின்றது. அதனால் சிசுமரணம் அதிகரிக்

கிறது. ஆகலால் கற்பத் தடைமுறையைக் கைக் கொள்ளுகின்றனர். நமக்கென்ன குறைவு? நாமேன் கற்பத் தடையைக் கையாளவெண்டும்?

மன்னர்:—அப்படியானல் நன்று. சந்ததி விருத்திக்கு அனு கூலமான சட்ட திட்டத்தை சிருஷ்டிப்போம்.

ஜான்சன்:—வேறெல்லாம் சரிதான். இங்கு குடியேறியுள்ள இந்தியர்களை மட்டும் தொலைத்துவிட்டால் நம் நாட்டின் பெருமை குன்றின்மேலிட்ட தீபம்போல் பிரகாசிக்கும்.

மன்னர்:—அவ்வாறு கூறியதற்குக் காரண மென்ன?

ஜான்சன்:—காரண மில்லாமலா? நினைத்தால் நெஞ்சம் குமுறுகின்றது. ஏன் இந்த தௌலத் தீவில் பிறந்தோ மென்றெண்ணி ஏங்கவேண்டிய திருக்கிறது.

மன்னர்:—அப்படித் தகாத காரியம் என்ன செய்துவிட்டார்கள்?

ஜான்சன்:—தகாத காரியமா? ஒன்ரு இரண்டா? அப்பப்பா! அதை எப்படிச் சொல்லுவது? நம்மை கொள்ளை கொண்டதைச் சொல்வதா? அன்றி நம் பெண்டிர்களில் பலரைக் கற்பழித்ததைச் சொல்வதா?

மன்னர்:—கொள்ளை யடிக்கிருர்களென்று எவ்வாறு சொல்ல முடியும்? அவர்கள் சொந்தப் பணத்தை இங்குகொண்டு வந்து முன் பின் அறியாத நம் தேசத்தவர்களுக்குக் கொடுத்து வாங்கி உதவிபுரிகின்றனர். அவர்களைத் தூஷிப்பது பாபமல்லவா?

ஜான்சன்:—பாபம்! பாபம்!!...........ஆம்! ஆம்!! நம்மவரிடம் கொடுத்து அவன் குடியைக் கெடுத்து கொள்ளையடிப்பது புண்ணியமோ!

மன்னர்:—அதை நான் ஒப்புக் கொள்ளமாட்டேன். நம் தேயத்தினர் பணம் பெற்றதும், விருத்தி செய்வதை மறந்து, குடி யாட்டத்திலும் கேளிக்கைகளிலும் செல விட்டு ஓட்டாண்டிகளாவதற்கு ஒன்று மறியாத தாராள சிந்தனையுள்ள இந்தியர்கள் செய்வதென்ன?

ஜான்சன்:—நான் கூறுவதில் பயனென்ன? ஏழை சொல் அம்பலத்தேறுமோ? அதுதான் அப்படியென்று வைத்துக் கொள்ளுங்கள். அவர்கள் நம் பெண் மக்களிடம் நடந்து கொள்ளுவது சரிதாமோ?

மன்னர்:--அப்படி என்ன அடாது செய்துவிட்டனர்?

ஜான்சன்:—தாங்கள் ஒன்றையும் அறியீர்கள் போலும்! நான் உங்கள் ஸ்தானத்திலிருந்தால் அப்பஞ்சைப் பயல்களை நாட்டைவிட்டு மட்டுமா ஓட்டுவேன்? நம்மை ஓட்டாண்டிகளாக்கி திரவியத்தை தங்கள் சொந்த நாட்டிற் கனுப்புவதுடன் மட்டுமன்றி, நமது தேச நங்கைகளையும் கற்பழிக்கின்றனர். கொடுமை! கொடுமை!! வெட்கம்! வெட்கம்!! உள்ள அளவும் சுகமனுபவித்து ஊருக்குப் போகும்பொழுது இப்பெண்களை அனாதைகளாக அலையவிடுகின்றனர். இதனைக் கண்டும் கவனியாமலிருக்கும் அரசாங்கமும் ஒரு அரசாங்கமா? இந்நாட்டில் இவ்வாறு வாழ்வதினும் கடும்புலி வாழும் காடு நன்று!

மன்னர்:—மிஸ்டர் ஜான்சன்! கோபம் வேண்டாம்! சாந்தங் கொள்க! அவர்கள் மேல் எள்ளத்தனையும் குற்றமில்லை. எல்லாம் நம் தேசப் பெண்கள்தான். சொத்து சுகங்களில் ஆசை கொண்டு, கஞ்சிக்கற்ற பெண்களில் பலர் தாங்களே இந்தியர்களை யடைகின்றனரே யல்லாது

வேறல்ல. தவறு நம் மேலல்லாது அவர்கள் பாலில்லை. நாம் நம் நாட்டு ஏழைப் பெண்மணிகளுக்கு கஞ்சியிட்டுக் கண்காணித்து வந்தால் அவர்கள் ஏன் அபநிலையடையப் போகின்றனர்?

ஜான்சன்:—வேந்தே! இந்த விஷயத்தில் என்ன சொன்னாலும் என் மனம் நிம்மதியடையாது. அந்த இந்தியர்களைத் துரத்தியடித்தோட்டாத வரையில் இந்த தௌலத் தீவு முன்னேற்ற மடையாது. இது நிச்சயம்.

மன்னர்:—ஜான்சன்! நன்று! இருக்கட்டும்! ஆத்திரப்பட்டு ஒன்றையும் செய்து விடலாகாது! வரவர இன்னும் தீர்க்க ஆலோசித்து ஒருவழி செய்வோம்.

இதனால் சற்று திருப்தியடைந்த ஜான்சன் மேஜைமேலிருந்த ஒரு விசைக் கருவியை அழுத்தினான். மணியொலி பரவியது. அப்பொழுதே இரு பாரசீக மாதர்கள் மிகவும் மெல்லிய உடையுடன் அதிலும் அரை நிர்வாணமாக அங்கு நுழைந்தனர். மன்னர் உள்பட அனைவரும் ஆனந்தங் கொண்டனர். மாதர்களிருவரும் அவர்கள் மனதைக் கவர்ந்தனர். இந்த நிலையில் ஜான்சன் ஏராளமான பிராந்திப் புட்டிகளை வெகு தாராளமாக உடைத்து அரசருக்கும் ஏனையோருக்கும் கொடுத்து தானும் பருகினான். குடியால் மனநிலையை இழந்த அவர்கள் தள்ளாடிய வண்ணம் எழுந்து பாரசீக மாதர்களை கட்டித் தழுவப் போட்டி போட்டனர். மெய் மறந்தனர். இருப்பது பூலோகமோ கைலாசமோ வென எண்ணினர்.

துரெண்ணமே குடிகொண்ட ஜான்சன் மறுபடியும் மேஜைமேலிருந்த விசைக் கருவியை அழுத்தினான். மணி ஒலி பரவியது. மாதர்களிருவரும் அங்கிருந்து சட்டென்று

நீங்கிச் சென்றனர். மன்னர் மாதர்களை விட்டகல மனமற்று ஏங்கினார். அந்த நிலையில் ஜான்சன் மற்றுமொரு பிராந்திப் புட்டியை உடைத்துக் கொடுத்தான். அதனையும் பருகிய அரசரின் ஆசை அதிகரித்தது. "நண்பா!..........அவர்களை வரச்சொல்ல மாட்டாயா?" என்று கெஞ்சிக் கேட்டார். "எவர்களை?" என்றான் ஜான்சன். "அந்தப் பெண்களை!" என்றார்.

"அரசே! அது முடியாது! அளவுக்கு மிஞ்சினால் காரியம் கெட்டுவிடும். ஆனால்.........." என்று மேலே ஒன்றும் கூறாது நிறுத்தினான். "ஆனாலென்ன? கூறு!" என்றார். "எப்படியும் இத்தீவிலுள்ள இந்தியர்களை விரட்டி யடிப்பதாக வாக்குறுதி தரவேண்டும்." என்று கேட்டான் சதிகார ஜான்சன். குடி மயக்கத்தாலும் மாதர்கள் இச்சையாலும் மயக்கமுற்ற அரசர் கொஞ்சமும் தங்கு தடையின்றி, "நல்லது! அப்படியே செய்வோம்" என்று கூறவே, அப்பாதகன் மீண்டும் விசைக் கருவியை அழுத்தினான். அம்மாதர்கள் தோன்றி ஆனந்த மூட்டினர். அரசருக்குண்டான ஆனந்தத்திற்கோ ரளவில்லை.

இவ்வாறாக ஜான்சன் கூட்டிய விருந்துச் சபை ஒரு வழியாக முடிவுக்கு வரவே அனைவரும் பிரிந்தனர்.



## மூன்றும் அத்தியாயம்.

குபேரக்குடியில் எட்வர்டு வீதியில் ஒரு பெரிய மாளிகையின் மேன் மாடியில் சுமார் பதினெட்டு வயது மதிப்பிடத் தக்க ஒரு அழகிய அணங்கு சோபாவில் சாய்ந்த வண்ணம், "சிச்சி! இதென்ன உலகம்! பணப் பேய்

பிடித்த உலகம்! பெற்றோரே பெண்களுக்கு சத்துருவாகும் பொழுது பெண்கள் முன்னேறுவ தெங்ஙனம்? கிழவருக்கு முன் பின் யோசியாது கிளியை வளர்த்து பூனைக்கு ஒப் படைத்தது போல் செய்துவிட்டார். என்னை நான் பிறந்த இந்த பாழும் தனவணிக சமூகத்தின் நிலை! இந்த பாரதநாட் டின் தவப் புதல்விகளை பணத்திற்கும், பட்டத்திற்கும், பத விக்கும் ஆசைப்பட்டு ஒன்று மறியாதவர்களுக்கு விற்றுப் பிழைக்க முன் வருகின்றனர். இவைகளை நினைத்தால் இரத் தக் கண்ணீர் வடிக்காமலிருக்க முடியுமோ? ஆணுக்கொரு நீதி! பெண்ணுக்கொரு நீதி! ஒரு கண்ணில் வெண்ணை! ஒரு கண்ணில் சுண்ணும்பு! கொடுமை! மனைவியை யிழந்த மணாளன் மறுமணம் செய்து கொள்ளலாம், ஆனால் புரு ஷனை யிழந்த பூவையற்கு அந்த உரிமையில்லையாம்! அம்மா? இச்சண்டாளச் சட்டத்தை இயற்றிய நீதிமான் யாவனோ? போகட்டும்! பருவ காலத்தில் மனமொத்த காதலனுடன் கலந்தனுபவிப்பதன்றோ பேரின்பம்! அப்படியிருக்க இந்தக் கிழவனுக்கு வாழ்க்கைப்பட்ட நான் என்ன சுகத்தை யனு பவிக்க முடியும்? அவரை மணந்ததிற்கு அவர் மூத்தாள் மகன் ஜெயசுந்தரனை மணந்திருந்தால் என் ஜென்மம் சாபல்யமாம். அவன் அழகே அழகு! என்ன காம் பீரம்! என்ன மந்தகாசம்! என்ன ஆண்மை! அழகின் அவ தாரம்! பெண்ணாய்ப் பிறந்தோர் அவனுடனன்றோ சுகிக்க வேண்டும்! அதன்றோ இன்பம்? அழகமைந்த மேனியான்! அவனுடைய வீரக் கண்களையும் வெற்றி முகத்தையும் பார்த் தாலே கண்ட பெண்கள் கொண்ட மையலை கண நேரத்தில் தீர்த்துக் கொள்ள எண்ணுவர். ஆனால் என் நிலை யென்ன? அவன் எனது சக்களத்தி மகன். எனக்கு மைந்தன். அவனை நான் இச்சிப்பது நீதிக்குப் பங்கம்! ஆனால் என் செய்வது?

என் மனம் அவனையே நாடுகின்றதே! யோசிப்பதில் வீண் காலதாமதம் தானாகும். அவனை அழைத்து எனது விருப்பத்தை அறிவிப்பதே மேல்,'' என்று ஒருவித முடிவுகொண்டு எழுந்து சுவற்றிலிருந்த ஒருவிசைக் கருவியை அழுத்தினாள். உடனே மணியடித்தது. ஒரு பணிப்பெண் அங்கு வந்தாள்.

"அடியே! கீழே சென்று ஜெயசுந்தரன் அங்கிருந்தால் நான் அழைப்பதாகக் கூறி சடுதியில் இங்குவரச் சொல்,'' என்று கட்டளையிட்டு அனுப்பிவிட்டு, சுவற்றில் பதிக்கப் பட்டிருந்த நிலைக் கண்ணாடியின் முன்னின்று தனது ஆடைகளை சரிப்படுத்தி அழகு செய்து கொண்டு நீட்டி நெளித்து சிரித்துப் பார்த்து தன் சோபாவில் வந்தமர்ந்தாள்.

சின்னேரத்தில் சுமார் இருபது வயது மதிப்பிடத் தக்க ஒரு கட்டழகன் அங்கு வந்தான். அழகன் என்றால் அவனுக்கே பொருந்தும். சிருஷ்டிகர்த்தா தனது முழுத்திறனையும் அவனைப் படைத்தலில் காட்டியுள்ளாரென்று கூறலாம். சுருங்கக் கூறுமிடத்து, சித்திரம் வரைவதில் கைதேர்ந்த நிபுணனாகிய ரவிவர்மாவால் தீட்டப்பட்ட எந்த ஆணுருவமும் இணையாகாதென்று கூறலாம். அவ்வளவு எழில்மலிந்த ஆண் மகன் அங்கு வந்ததும், சோபாவில் சாய்ந்திருந்த அணங்கு எழுந்தாள். கடைக் கண்ணால் நோக்கினாள். பேச முனைந்தாள். நாவெழவில்லை! நாணம் குறுக்கிட்டது. தலைகுனிந்து சில நிமிஷ நேரம் கற்சிலை போல் நின்றாள்.

வந்த வாலிபன் ஒன்றும் விளங்காது அப்பெண் மணியை நோக்கி, "சிற்றன்னையே! என்னை அழைத்த தாங்கள் ஒன்றும் கூறாது மௌனமாய் நிற்பதேனோ?,'' எனக் கேட்டான்.

"ஜெயசுந்தரா! நான் அழகா யிருக்கின்றேனா? என்னைப் பார்!'' என்று கூறி புன்முறுவல் பூத்த முகத்தோடு,

தன் காத்தை அவன் தோள்மேலிட்டு கடைக்கண்ணால் நோக்கினாள்.

"தாயே! இதைக் கேட்கவா என்னை இவ்வளவு தூரம் அழைத்தீர்கள்! தங்கள் அழகை கண்ணாடியில் பார்த்து மகிழலாகாதா? வேறு விசேஷ மேதானு முண்டா? நான் செல்ல வேண்டும்," என்றான்.

"ஜெபசுந்தரா! அவசரம் வேண்டாம்! என்னைப்பார்க்க உனக்குப் பிடிக்கவில்லையோ? நானென்ன அழகாயில்லையா?" என்று மீண்டும் கேட்டாள்.

"அம்மா! தாயைத் தனையன் அழகல்ல வென்று கூற முடியுமோ? 'தாய்' என்றாலே அழகு தானம்மா! வேறேது முண்டா? நான் செல்லலாமா?" என்று கேட்டான்.

"அப்பா! நான் உன்னை ஒன்று கேட்கப் போகின்றேன். கேட்கலாமோ?" என்றாள்.

" தாயே! தடை யின்றிக் கேட்கலாம் "என்றான்.

"ஜெபசுந்தரா! இது முதல் நீ என்னை 'தாயே' என் றழைக்கலாகாது." என்றாள்.

"ஏனம்மா அவ்வாறு கூறுகின்றீர்கள்? அவ்வாறழைக்க பாத்திய மற்றவனா? மாற்றாள் பிள்ளை என்பதற்காக என்னை நிராகரிக்கின்றீர்களா!" எனக் கேட்டான்.

"அவைகளை யெல்லாம் விட்டு விடு. நான் உன்னை நேசிக்கின்றேன். உனது பதிலென்ன?" என்றாள்.

"அம்மா! இதற்கெனது பதிலேதற்கு? காக்கைக்கு தன் குஞ்சு பொன் குஞ்சல்லவோ! அறிவு குறைந்த அக்காக்கை யினமே அவ்வாறிருக்க, ஆறறிவுள்ள தாங்கள் மைந்தனாகிய என்னை நேசிப்பதில் வியப்பொன்று மில்லையே! ஆனால் இந்

தக் காலத்தில் மாற்றாள் மகனை சத்துருவாக எண்ணுவதினால், தாங்கள் அவ்வாறின்றி என்னை நேசிப்பது எனது பாக்கியமும் உங்களின் நற்குல ஒழுக்கமுமேயாகும்'' என்று வெள்ளை மனதுடன் மொழிந்தான்.

“ஜெயசுந்தரா! அவ்வாறில்லை. நான்....உன்னை........ ஆம்........கா....த...லி....க்....கி....ன்....றேன்.'' என்றாள்.

இதனைச் செவிமடுத்த ஜெயசுந்தரனின் இதயம் துடி துடித்தது. இரத்தம் கொதிப்புண்டது. “சீச்சீ! பேயே! உன்னை இது பரியந்தம் குலமகளெனக் கருதி கடவுளிடம் காட்டும் அன்பிலும் அதிகமாகக் காட்டினேன். இப்பொழுது நீ ஒரு விலை மகளென்பதை அறிந்தேன். கொண்ட கணவனுக்கு இரண்டகம் செய்து மகனென்றும் பாராமல், கொஞ்சமும் வெட்கமின்றி என்னைக் காதலிப்பதாகக் கூறிய சண்டாளி! உன் முகத்தில் விழிப்பதும் பாபம்! நீ பெண்ணுருக் கொண்ட பேயுருவம்! 'கணவனே தெய்வம். கற்பே பூஷணம்' என்பதை மறந்த மூதேவி.'' என்று கூறி விரைந்து திரும்பினான்.

இதனைக் கேட்ட அம்மாது அவனின் காத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, “ஜெயசுந்தரா! அவமதித்துப் பேசாதே! நான் சொல்லுவதைத் தட்டாமல் என் இஷ்டத்திற்கு இணங்கு'' என்று வற்புறுத்தினாள்.

அவன்:—அது முடியாத காரியம்.

அவள்:—உண்மையாகவா?

அவன்:—ஆம்! வற்புறுத்துவதில் பயனில்லை.

அவள்:—அப்படியானால் உன் உயிருக்கு உலை வைத்து விடுவேன்.

அவன்:—உன் இஷ்டத்திற்கு இணங்கி, பிற்காலத்தில் சிறிய தாயை அனுபவித்த சண்டாளன் என்று தூற்றப் படுவதிலும், கணவனுக்கு வஞ்சகம் செய்ய எண்ணிய பாவி உன்னால் நான் மாய்வது நன்று! கண்ணியமுள்ள ஒருவனுக்கேற்படும் அபகீர்த்தியிலும் மரணம் ஒரு பெரிதல்ல! அன்றியும் மரணத்திற் கஞ்சி தீத்தொழில் புரிவோன் மனிதனல்ல.

அவள்:—அப்படியாயின்?

அவன்:—உயிர் விடவும் தயார். உன் இஷ்டத்திற்கு ஒரு பொழுதும் இணங்கேன். நீ எங்கள் குலத்தைக் கெடுக்க வந்த சண்டாளி! துரோகி! வேறென்ன கூற விருக்கிறது? நீ ஒரு வேசி! அதிலும் கேடு கெட்டவள்.

அவள்:—அடே! என்ன ஆணவம் உனக்கு? உன்னை எப்பாடு படுத்துகிறேனென்று பார்.

அவன்:—உன்னால் என்ன செய்ய முடியும்?

அவள்:—"அதை வருங் காலத்தில் அறிவாய். கற்பையும் இழக்கத் துணிந்த ஒரு காரிகை நினைத்தால் ஆகாததுமுண்டோ?" என்று சினத்துடன் கூறி, பிடிபட்டிருந்த அவன் கரத்தை உதறி விடுத்து திரும்பவும் சோபாவில் சாய்ந்தாள்.

ஜெய சுந்தரன் இவற்றை யெல்லாம் எண்ணி மனம் வருந்தியவனாய் கீழிறங்கி தனது தனி அரைக்குள் சென்று, மேஜை முன் அமர்ந்தான். மேஜைமே லிருந்த ஒரு அழைப்புக் கடிதம் காக்ஷி யளித்தது. தனது கடிகாரத்தை உற்று நோக்கினான். மணி மூன்று. "அடடா! சண்டாளியால் மறந்தேன்! ஆனாலுமென்ன? நான்கு மணிக்குத் தானே

கூட்டம் ஆரம்பம். அதற்குள்ளா சென்னைக்குச் செல்ல முடியாது? என்று முடிவு கொண்டு ஒரு தேசியக் கூட்டத்திற்கு தலைமை வகிக்கப் புறப்பட்டான்.

இது இவ்வாறாக சோபாவில் சாய்ந்திருந்த அவனின் யாற்றுந்தாய், "இனி அசட்டையா யிருந்கால் காரியம் கெட்டுவிடும். அவனிடம் என் மன எழுச்சி முழுமையும் கூறிவிட்டேன். இனி என் மானம் கெடுவது நிச்சயம்! ஆனால் அதற்குள் அவனைத் தொலைத்து விடுவது சிலாக்கியம்." என்று எண்ணிக் கொண்டிருக்கும் பொழுது படிக் கட்டு வழியாக யாரோ மேல் மாடிக்கு வரும் சத்தம் கேட்டது. சிறிது நேரத்தில் சுமார் ஐம்பது வயதுள்ள தொந்தி பருத்த ஒரு ஆண்பிள்ளை அங்கு வந்தார். இவர் வரவைக் கண்ட அம்மாது சடுதியில் சோகமே உருக் கொண்டாள்? முகத்தில் களை சிறிதுமில்லை.

வந்த ஆடவர் அவளை நோக்கி, "கண்மணே! என் முக வாட்டமா யிருக்கின்றாய்?" என்று கூறி தனது காத்தினால் அவளது நீண்ட கேசத்தைத் தடவினார். வெடுக்கென்று அவர் காத்தை அப்புறப்படுத்தி மறு பக்கமாகத் திரும்பிக் கொண்டாள். மீண்டும், அவள் கேசத்தில் தனது காத்தை வைத்தவராய், "ஏன் இவ்வளவு கோபம்? என்ன நேர்ந்தது?" எனக் கேட்டார். அவள் வாயைத் திறக்கவில்லை. வந்தவர் உளம் பதறியது. "உனக்கு யார் என்ன துன்பம் செய்தார் கள்?" என்று கேட்டார்.

அவள்:—"துன்பமா துன்பம்! என் தலைவிதி! உங்களைச் சொல்லுவதில் யாது பயன்? என்னைப் பெற்ற அந்த பாவிச் செட்டியைச் சொல்லவேண்டும். உங்களுக்குக் கட்டாமல் ஒரு பரதேசிக்குக் கட்டியிருந்தால் சற்று

நிம்மதியுடன் வாழலாம்" என்று பீடிகை போட்டாள்.

அவர்:—கண்மணி! ஏன்? இவ்வாறெல்லாம் கூறுகின்றாய்?

அவள்:—ஏனு? அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கின்றீர்கள்?

அவர்:—அதைச் சொல்லித் தான் தொலையேன்?

அவள்:—ஆம்! எனக்கு இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும்.

அவர்:—அப்படி என்ன நேர்ந்து விட்டது?

அவள்:—ஐயோ! மானமிழந்து உயிர் வாழலாமா? சாவதே மேல்.

அவர்:—பெண்ணே! அப்படி யொன்றும் செய்து விடாதே! நடந்ததைக் கூறு. ஆகவேண்டியதைக் கவனிக்கின்றேன்.

அவள்:—சத்தியமாகக் கவனிப்பீர்களா?

அவர்:—அதிலென்ன ஆக்ஷேபணை!

அவள்:—"உங்களையே தெய்வமென்றிருக்கும் என்னை,—தாங்களே உடல்,—தாங்களே உயிர்,—தாங்களே அனைத்து மென்றெண்ணி கற்பிற் சிறந்த தொன்றில்லை என்றெண்ணி யிருக்கும் என்னை ஒருவன் அணுகி, "உன் புருஷன் கிழவன்; அவனிடம் உன்னால் என்ன சுகமடைய முடியும்? என்னைப் பார்! நானே மன்மதன் போலிருக்கின்றேன். என்னைக் காதலித்தா யானால் நாமிருவரும் மதனும் இரதியும் போல் இன்ப லீலை செய்து வாழ்வோம்." என்று ஒரு தடியன்,—காமப் பித்தன் கூறினால் நீங்கள் அவனை என்ன செய்வீர்கள்?" என்று ஆரம்பித்தாள்.

அவர்:—அப்படியும் ஒருவன் உன்னிடம் சொன்னானு?

அவள்:—ஏன் சொல்லாமல்?

அவர்:—"அவனைக் கொலை செய்யவும் தயங்கமாட்டேன். அவன் யார்? சீக்கிரம் கூறு" என்று அவசரப்பட்டார்.

அவள்:—நாதா! கொலை செய்தல் பாபம்! அவனை இந்த நாட்டைவிட் டோட்டி விடுதல் தகும்.

அவர்:—பிரியை! அது என்னால் எப்படி முடியும்? நான் என்ன சர்வாதிகாரியா?

அவள்:—நாதா! அதைப் பற்றிச் சிந்திக்கவேண்டாம். நீங்கள் அவ்வாறு அவனிடம் கூறினாலே போதும். உடனே போய் விடுவான்.

அவர்:—அப்படிப் பட்டவன் யார்?

அவள்:—அவன்தான் உங்கள்......மூத்தாள்......மகன்....... ஜெயசுந்தரன்.

இதனைக் கேட்ட அவர் இடியேறுண்ட நாகம்போலானார். மூர்ச்சித்து வீழ்ந்தார். சற்று நேரத்தில் தெளிந்தெழுந்தார். "ஆ! காதலி! நீ கூறுவதை நான் நம்பமுடியாது! அவன் உத்தமன்! சத்திய சீலன்! ஒரு பொழுதும் அவன் அவ்வார்த்தைகளைப் பகர்ந்திருக்க மாட்டான். வீணில் அவனை நிந்தை செய்தல் பாபம்." என்று கனிந்து கூறினார்.

"நாதா! நீங்கள் கள்ளங் கபடற்றவர்கள். வெளுத்ததெல்லாம் பாலென்று நம்பும் உள்ளம் படைத்தவர்கள். அதனால் தான் அவ்வாறு கூறுகின்றீர்கள். சத்தியமாகச் சொல்லுகிறேன். அவன் என்னை வலுவில் இழுத்து தகாத வார்த்தைகளை மொழிந்தான். அப்பொழுதே நான் என் உயிரைமாய்த்துக் கொண்டிருப்பேன். ஆனால் அவ்வாறு செய்யுமுன் தாலி கட்டிய தங்களிடம் அவற்றைக் கூற எண்ணினேன். என் வார்த்தைகளை நம்பி அவனை இவ்வூரைவிட் டோட்டி

ஞல் உயிர் வாழ்வேன். இல்லாவிடில், உங்கள் மேல் ஆணை யாகக் கூறுகின்றேன். உயிர் போவது நிச்சயம்'' என்று கடிந்துரைத்தாள்.

அவர் கவலைக் கடலில் ஆழ்ந்தார். மனைவியை இழக்க வும் மனமில்லை. மகனை நாட்டைவிட் டோட்டவும் சம்மத மில்லை. இருதலைக் கொள்ளி எறும்புபோலானுர். இந்த நிலையில் அந்தப் புண்ணியவதி வாய்திறந்து, "நாதா! சிந்திப் பதில் பயனில்லை. இரண்டிலொன்று நிச்சயமாக நடந்தே யாகவேண்டும். என்ன பதில்?'' என்று கேட்டாள்.

"காதலி! வேண்டாம்! அவன் ஒரு வேளை உன்னிடம் துர்வார்த்தைகள் பேசியிருப்பினும், அவனை மன்னித்துவிட லாகாதா?'' என்று கல்லும் கரையும் வண்ணம் கெஞ்சிக் கேட்டார்.

"மன்னிப்பதா? நன்று நன்று! வேண்டும் வேண்டும்!! நான் அப்பொழுதே உயிரை மாய்த்துக் கொண்டிருக்கவேண் டும்! இது பரியந்தம் உயிரைத் தாங்கியது எனது மடத்தனம். இனி என்னைப் பற்றி நீங்கள் கனவிலும் நினைக்கவேண்டாம். உங்களை பதியாக அடைந்ததற்கு இவ்வளவு அவமானம் போதும்!'' என்று கோபமாக மொழிய,

"தேவி! கோபம் வேண்டாம்! வேண்டுமானுல் அவனை உன் இஷ்டப்படி ஓட்டிவிடுகின்றேன். ஆனுல் எனக்கு அவன் சத்தியந் தவருத தருமசீலன் என்றே தோன்றுகின் றது. அவனை நாம் கைவிட்டாலும் கடவுள் ஒருபொழுதும் கைவிடமாட்டார். எல்லாம் நன்மைக்கே என்றவாறு இது வும் அவனுக்கொரு நன்மையாகவே முடியும். ஆனுல் பெற்ற என் மனம் அவனைப் பிரியக் கலங்குகின்றது. ஆயி னும் என் செய்வது? எல்லாம் விதிவசப்படி நடக்கும்'' என்று கூறினுர்.

இப்பொழுது கெடுமதி கொண்ட அச்சண்டாளியின் மனம் குளிர்ந்தது. முகம் மலர்ந்தது. தனது ஜாலமெல்லாம் பலித்ததை எண்ணி உளம் பூரித்தாள். ஜெயசுந்தரன் மேல் வீண் பழி சுமத்தி தான் களங்கமற்றவள்போல் நடித்து காரியத்தில் சித்திபெற்றமை குறித்து மனம் மகிழ்ந்தாள்.

வாசக அன்பர்கள் இச்சண்டாளியையும் அவள் பர்த்தாவையும் சத்தியசீலன் ஜெயசுந்தரனையும் அறிய ஆவல் கொள்வார்களாதலின் அதனைச் சற்று நோக்குவோம்.

கதா நாயகியான ஜெயவதனியிடம் புத்திகற்று தனது மதியீனத்தை நினைந்து வருந்தி அவளின் கற்பிற்கு பங்கம் ஏற்படாமல் வெளிவந்த ஆடவராகிய முனிசிபல் சேர்மன் செட்டியாரே இவ்வாடவராவார். அவரின் முதல் மனைவி இறக்க மறுமணம் செய்து கொண்டார். அவரின் மறு மனைவியே நமது ஜெயசுந்தரன் மேல் அபாண்டப் பழி சுமத்திய அணங்கு. செட்டியாரின் முதல் மனைவியின் புதல்வனே ஜெயசுந்தரன்.

நேயர்களே! செட்டியார் சமூகத்தார் நடைமுறையில் கண்மூடித் தனமாய் நடாத்திவரும் சகிக்கமுடியாத எண்ணற்ற அட்டூழியங்களில் ஐம்பது வயதுக் கிழவருக்கு பதினெட்டு வயதுப் பெண்ணை மணம் புரிவிப்பதும் ஒன்றென நாம் இங்கு எழுதாமலேயே நீங்கள் அறிவீர்கள். இதையும் இதுபோன்ற எண்ணற்ற எழுதத் தரமற்ற செய்கைகளையும் கண்ணாரக் கண்டும் இச்சமூகம் கண்மூடி மௌனியா யிருப்பதினும் விந்தை வேறுதானுளதோ?

இது இவ்வாறாக, சென்னைமா நகருக்கு தேசியக் கூட்டத்திற்கு தலைமை வகிக்கச் சென்ற சம்பவத்தைக் கூறுவோம்.

கடற்கரையில் ஒரே கூட்டம். எள் விழக்கூட இடமில்லை. மணி சரியாக நான்கடிக்க, வேண்டுகோட்படி ஜெயசுந்தரன் தலைமை வகித்தான். தேசியக் கீதத்துடன் கூட்டம் ஆரம்பமாகியது. ஜெயசுந்தரன் முன்னுரையாக தேசீயக் கூட்டங்களின் அவசியத்தைப் பற்றிக் கூறி பின்னர், "இப்பொழுது மிஸ் ஹேமாவதியவர்கள் பேசுவார்கள்" என்று கூற சிருஷ்டியில் மேம்பட்ட அழகு வாய்ந்த யுவதி பொருத்தி மேடை மேல் தோன்றி,

"சகோதரிகளே!

சகோதரர்களே!!

இப்பொழுது நமது நிலை என்ன? என்பதைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூற முன்வந்தேன். சரித்திரங்களைப் புரட்டிப் பார்ப்பீர்களேயாயின், நமது பாரத நாடு உலகு அறியாத ஒரு காலத்திலேயே உன்னத நிலையிலிருந்த தென்பதை அறிவீர்கள். அக்காலத்தில் மற்ற நாட்டினர் நமது தேசத்தை உயிர் நாடியாகக் கொண்டு பலவாற்றானும் தொடர்பு கொள்ளப் போட்டி போட்டனர். இன்னணைய புகழ் மிக்க நம் இந்தியா தேசம், இன்று எந்நிலையிலிருக்கிறது? எண்ணிப் பாருங்கள்! உண்ண உணவிற்கும், உடுக்க உடைக்கும், நிற்க நிழலுக்கும் வாடி, இடுவார் முகம்பார்த்து, இல்லை என்பார் வாய் பார்த்து மிகவும் மோசமான நிலைமைக்கு வந்துவிட்டது. இந்த நிலையை பிறநாடுகள் அடைந்திருப்பின், இற்றைக்கு, அவைகள் இருந்த இடங்களில் எறுக்கு முளைத்திருக்கும். ஆனால், நாம்,—நமது முன்னோர்களின் ஆத்ம பலத்தால் இத்தாழ் நிலையிலும் எவரும் வியப்புறும் வண்ணம் குற்றுயிருடன் வாழ்கின்றோம்.

தேச மக்களே! இந்த விதமாக, வாழ்வு கெட்டு, தாழ்வு மிஞ்சி, பாழ்பட்டு நிற்கும் நமக்கு பேச்சு சுதந்திரமில்லை!

எழுத்து சுதந்திரமில்லே! நம் உழைப்பெல்லாம் பிறரே பயன் பெறுகின்றனர்! நாம்பார்த்திருக்கப் பகற் கொள்ளே யடிக்கின் ருர்கள்! பல பல வகைகளில் பல பல கோடிப் பணத்தை அள்ளிக் கொடுக்கின்ருேம்!

அந்தோ! நம் வியாபாரம் போயிற்று! கைத்தொழில் போயிற்று! விவசாயம் போற்றப்படவில்லே! கிராமத்தொழில் நசுக்குற்றது! இவ்வாறு பலவாற்ருனும் துன்புறும் நமக்கு 'இம்' என்ருல் சிறைவாசம்! ஏனென்ருல் வனவாசம! அந்தோ! அநியாயம்! அடக்குமுறைக் கொடுமை! பிச்சைபோல் கொஞ்சங் கொஞ்சமாக நமது நாட்டைப் பிடுங்கிக் கொண்டார்கள். கொடுத்துவிட்டு கண்ணில்லாக் குழந்தைகள்போல் கலங்குகின்ருேம்.

சகோதரிகளே! சகோதரர்களே!! நம் நல்வாழ்விற்கோர் வழியில்லேயா? உலகில் ஓர் உன்னத ஸ்தானம் கிட்டாதா? ஏன் இல்லாமல்?

உயர்வு தாழ்வுகளே உடைத்தெறிய வேண்டும். கோடிக் கணக்கில் கொட்டிக் கொடுக்கும் செல்வத்தை நிறுத்தவேண்டும். உழவுத் தொழிலுக்கு ஆதரவு காட்டவேண்டும். சொந்த அரசியலபிவிருத்தியும், ஆண்மை எழிலும் தழைத்தோங்கவேண்டும். இவற்றிற்கெல்லாம் வழியென்ன? சுதந்திரம் வேண்டும்!

பாரத மக்களே! அதிகமாகக் கூற விரும்பவில்லே பிறரை அடிமை கொண்டோர் வீழ்வது நிச்சயம். நம்மை அடக்கி ஆழ்வோர் வீழ்வது திண்ணம். ஆதலின் உங்கள் உடலிலுள்ள இறுதிச் சொட்டு இரத்தம் சிந்தும்வரை சுதந்திரத்திற்காகப் போராடுங்கள். அன்னிய ஆக்ஷியை உடைத்தெறியுங்கள். அடிமைத் தளேயை அகற்றுங்கள். மரணத்

திற்கு அஞ்சாதீர்கள். வெற்றியுண்டு! " என்று கூறி முடித்தாள்.

எங்கும் ஓரே ஆரவாரம். அவளின் பேச்சை மெச்சாதாரில்லை. இந்த நிலையில் நமது கதாநாயகன் எழுந்து,

"சகோதர சகோதரிகளே! இன்று நமது தாய்நாடிருக்கும் தாழ் நிலைக்கு சுதந்திரம் மிகவும் அத்தியாவசியமானது. அந்த சுதந்திரத்தை யடைவதற்கு இப்பொழுது இங்கு பிரசங்கம் செய்த மாதரசி போன்ற பேச்சு வல்லமையுள்ள பெண்மணிகளே பொது மக்களுக்கு வீர உணர்ச்சியை ஊட்டவல்லவர்கள். இந்நங்கையின் ஒவ்வொரு அக்ஷரமும் உங்கள் மனதில் பசுமரத் தாணிபோல் பதிந்திருக்குமென்பதில் ஐயமில்லை. ஆனால் அவைகளைக் கேட்ட நீங்கள் அதன்படி ஒழுகவேண்டு மென்பதே எனது கோரிக்கை" என்று தனது முடிவுரையை நிகழ்த்தினன்.

அவரவர் தங்கள் தங்கள் இல்லமேகினர். ஜெய சுந்தரன் மோட்டார் வண்டியிலேறினன். அப்பொழுது மிஸ். ஹேமாவதி ஒரு கடிதத்தை அவனிடம் கொடுத்து சற்றும் தங்காது பதிலையும் எதிர்பாராது அகன்ருள். கடிதத்தைப் பெற்ற கதா நாயகன் ஒன்றும் விளங்காமல், "அவள் ஏன் அவ்வளவு சீக்கிரத்தில் மறுமொழி பெருமல் செல்லவேண்டும்?" என்றெண்ணிய வண்ணம் வீடு நோக்கினன்.



## நான்காம் அத்தியாயம்.

முன் அத்தியாயத்தில் கூறிய சம்பவங்கள் நடந்த இரவு சுமார் எட்டு மணிக்கு குபேரக்குடி முனிசிபல் சேர்மன் செட்டியார் தம் வீட்டு மேல் மாடியில் ஒரு சோபாவில்

சாய்ந்த வண்ணம் தனது தொந்தியைத் தடவிய நிலையில், மனைவியின் வேண்டுகோளை எவ்வாறு நிறைவேற்றுவதென்ற யோசனையில் சித்தங் கலங்கி மெய்மறந்திருந்தார். அத்தருணம் ஜெயசுந்தரன் அங்கு வந்தான். இவனைக் கண்ட செட்டியார் கட்டித் தழுவிக் கண்ணீரைக் கரை புரளவிட்டார். ஜெயசுந்தரன் ஒன்றும் தோன்றாமல், "தந்தாய்! தயக்கமென்ன? கூறுங்கள்" என்று கேட்டான்.

"அருமைக் குமாரா! உன் தலைவிதி இப்படியுமிருக்குமென்று கனவிலும் நினைக்கவில்லை." என்று கூறி விம்மி விம்மி யழுதார்.

"அப்பா! ஒன்றையும கூறாமல் தாங்கள் துக்கிப்பதேன்? எனக்கேதும் ஆபத்தேற்பட்டிருக்கிறதா? அல்லால் என்னால் தங்களுக்கேதேனும் இடைஞ்சல் ஏற்பட்டுள்ளதோ?" என்று மிகவும் பரிந்து கேட்டான்.

"மகனே! எவ்வாறு கூறுவேன்? நான் பாவி! இச்சண்டாளனுக்கு நீ மகனாய்ப் பிறந்தது மகா பாபம். நான் ஏன் மறு விவாஹம் செய்து கொண்டேன்? அதனாலன்றோ இவ்வாறு துக்கப்பட வேண்டியதிருக்கிறது?" என்று கூறி மீண்டும் அழுதார்.

"அப்பா! சிற்றன்னை மிகவும் நல்லவர்களாயிற்றே! உங்களை ஏதும் கடிந்துரைத்தார்களா? வீணில் என்னையும் வருத்தத்திற்குள்ளாக்காமல் நடந்தவைகளைக் கூறுங்கள்" என்று மிகவும் வருந்திக் கேட்டான்.

"அருந்தவப் புதல்வா! உன் பால் போன்ற மனதிற்கு பழுது நினைத்தாள்! அவள் சண்டாளி!" என்று கூறி மூர்ச்சித்துக் கீழே வீழ்ந்தார்.

அவரைத் தன் தோள் மேல் அணைத்துக் கொண்டு மூர்ச்சை தெளிவித்து, "அப்பா! ஏன் கலங்குகின்றீர்கள்? நான் என்ன செய்யவேண்டும்?" கூறுங்கள் என்ருன்.

"குமாரா! நான் உன்னை ஒன்றும் செய்யச் சொல்லவில்லை......ஆனல் அந்தச் சண்டாளி......" என்று மேலே கூறமாட்டாது தயங்கினர்.

ஜெயசுந்தரன் தனது மாற்ருந்தாயின் சூழ்ச்சி என்பதை ஒருவாறு யூகத்தால் அறிந்து கொண்டான். தனது காலபேதத்தை யெண்ணி வருந்தியவனய், "தந்தாய்! ஏன் தயங்குகின்றீர்கள்? அவர்கள்,—ஆம்,—சிற்றன்னை.......... என்ன சொன்னர்கள்?" என்று மிகுந்த பரபரப்புடன் கேட்டான்.

"அவள்....உன்னை....இந்த....ஊரைவிட்டோடச் சொன்ஞள். ஆனல்...." என்று நிறுத்தினர்.

"ஆனல் என்ன? கூறுங்கள்" என்ருன். "மகனே! அவளை ஓட்ட எண்ணிவிட்டேன்!" என்ருர்.

"அப்பா! இதென்ன கொடுமை? உங்கள் எண்ணம் தவறு! கிழ வயதில் ஒரு யுவதியை மணம் புரிந்த தாங்கள் அவளின் வாழ்க்கையைக் கெடுக்க முனைவது மகா பாபமான காரியம். நான், பெற்ற தாயை பிறந்த சில ஆண்டுகளில் இழந்தேன்! இப்பொழுது பிறந்த பொன்னட்டை விட்டகல்கின்றேன்! என் விதிவசம்! ஆனல், அப்பா! ஒன்றுமட்டும் கூற விரும்புகிறேன். உண்மையாயும் உங்கள் ஆணையாயும் கூறுகின்றேன். நான் நிரபராதி. ஒன்றும் அறியாதவன். என்னை நம்புங்கள்! நான் இதோ அகல்கின்றேன். என் பிரிவிற்காக என் சிற்றன்னையை வருத்தாதீர்கள்" என்று கூறி அவர் காலில் வீழ்ந்து நமஸ்கரித் தெழுந்து, பதில்

மொழியை எதிர் பார்க்காமல், கீழிறங்கி வெளி நடந்தான்; இதனைச் சகியாத செட்டியார் அடியற்ற நெடு மரம்போல் மண்ணில் வீழ்ந்து மூர்ச்சித்தார்.

குபேரக் குடியிலிருந்து சென்னைக்குச் செல்லும் குறுக்குப் பாதை. நள்ளிரவு. ஆனால் ஆகாயம் சற்று வெளிச்சமாகவேயிருந்தது. ஒரு வாலிபன் நடந்து கொண்டிருந்தான். சின்னேரம் நடந்த பின், "என் செய்வது? எய்தார் இருக்க அம்பை நோவதில் பயனென்ன? கால வித்தியாசம்! கிழட்டு வயதில் அவர் மறுமணம் செய்து கொண்டதினால் எனக்கேற்பட்ட லாபமிது! நான் ஏன் இந்தக் குலத்தில் பிறந்தேன்? ஊழ்வினை போலும்!" என்றெண்ணி மனம் நொந்தான்.

குடை நிழலிருந்து குஞ்சர மூர்ந்தோர் நடைமெலிந்தோரிடம் நண்ணினும் நண்ணுவர் என்பது மெய்ப்பிக்க, குபேரக்குடி சேர்மன் செட்டியார் மகன் ஜெயசுந்தரன் இதுவேளை கல்லிலும் முள்ளிலும் கால் நடையாக சென்னைக்குச் செல்ல நேர்ந்தது. வழியில் பல பல எண்ணினான். அவன் எண்ணங்கள் வாயுவேக மனோ வேகமாயின. அந்த நிலையில் தேசியக் கூட்டம் முடிவடைந்து வீட்டுக்குத் திரும்பும் பொழுது, ஹேமாவதியால் கொடுக்கப்பட்ட கடிதத்தின் ஞாபகம் வரவே, தனது சட்டைப் பையிலிருந்த கடிதத்தை எடுத்துப் பிரித்து,

சென்னை, 18 செப்டம்பர் 1936.

அன்புள்ள தலைவ!

உங்கள் முகத்தினைக் கண்டதுமே அகத்தினை அறிந்து கொண்டேன். தன வணிக குலத்தில் பிறந்த தாங்கள் தேச சேவையில் முன்னணியில் நிற்பது போற்றற் பாலதாகும்.

நிற்க, தங்களுடன் சில வார்த்தைகள் தனித்துப் பேச எண்ணியுள்ளேன். நான் ஒரு பெண் என்பதினுல் தாங்கள் ஒதுங்கிப் போய்விடவேண்டாம். சரளமாகப் பேச முன் வருவதை அன்புடன் ஏற்றுக் கொள்ளுவேன். ஆதலின் நாளை இரவு ஒன்பது மணிக்கு இந்நகர் கடற்கரையின் இரும்பு வாராவதி யருகில் சந்தியுங்கள்.

தங்களை எதிர்பார்க்கும்,

ஹேமாவதி.

என்று படித்தான். அவள் தன்னுடன் தனித்துப் பேச சம்பந்தமொன்றுமில்லை யென்பதை யெண்ணி, எக்காரணமென்றறிய ஆவல் கொண்டான். அவளைச் சந்தித்துப் பேசிய பின் தனது பிற்கால வாழ்வைப் பற்றி யோசிக்க முடிவு கொண்டு நடந்தான்.

அன்று இரவையும் ஒருவாறு கழித்தான். பொழுதும் புலர்ந்தது. அன்றயப் பொழுதையும் அப்படியும் இப்படியுமாய்க் கழித்தான். இரவு சரியாக ஒன்பது மணிக்கு குறிப்பிட்ட இடத்திற்குச் சென்றுன். நிமிஷங்கள் பல கழிந்தன. ஹேமாவதி வந்தாளில்லை. ஒரு வேளை யாரும் சூழ்ச்சி செய்திருப்பார்களோ வென்றெண்ணினுன். அத்தருணத்தில் யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே என்றுற் போல் உருவம் உதயமாகு முன் பாதச் சிலம்பொலி பரவியது. சற்று நேரத்தில் ஹேமாவதி அங்கு வந்தாள். ஆகாயத்தின் பிரகாசத்தால் அவள் அவனது அழகைப் பருகினுள். "அடைந்தால் இவரையன்றோ அடைய வேண்டும்! அப்பொழுதன்றோ ஜன்மம் சாபல்யமாகும்!" என்றவாறு சிந்தித்து, அருகில் வந்து கடைக் கண்ணுல் நோக்கி புன்

முறுவல் பூத்தாள். கண்ணேக்கில் கட்டுண்ட ஜெயசுந்தரன் சங்கோஜத்தால் தலை குனிந்து தரையை நோக்கினன். ஒருவரோடொருவர் வாய்ச் சொற்களாடவில்லையென்ருலும், கண்கள் கலந்துறவாடின. இதற்கு மேலென்னவேண்டும்?

ஜெயசுந்தரன் அவளோடு பேச எண்ணினன். ஆனல் நாணம் குறுக்கிட்டது. ஹேமாவதி அவனிலும் அதிகமாக ஆர்வம் கொண்டாள். ஆனல் பெண்களுக்கு இயற்கையாகவுள்ள அச்சம், மடம் ஆகியவைகள் குறுக்கிட்டன. என்ருலும் ஒருவாறு தேறி திடங்கொண்டு அவனை நோக்கி,

"உங்களைத் தானே!" என்று ஆரம்பித்தாள். அப்பொழுதுதான் உறங்கி விழித்தவன்போல், "என்னையா?" என்ருன். "ஆம்! நீங்கள் மிகுந்த நேரமாகக் காத்திருக்கின்றீர்களோ?" என வினவ, "சுமார் அரை மணி நேரமாக" என்ருன். அதற்கு மேல் என்ன பேசுவதென்று தோன்றவில்லை. சற்று நேரம் இருவரும் மௌனமாகவிருந்தனர்.

"என்னை இங்கு வரவழைத்த காரணமென்ன?" எனக் கேட்டான்.

"அதனை அறியீர்களோ?" என்று வியப்புறக் கேட்டாள்.

"எவ்வாறு அறிவது?" கடிதத்தில் நீ வேறென்றையும் குறிப்பிட்டிருக்கவில்லையே?" என்ருன்.

"ஓகோ! தெரியாதா! சுத்த வெள்ளையர்போலிருக்கிறது!" என்ருள்.

"இல்லை! நான் இந்திய நாட்டில் பிறந்த ஒரு கருப்பன்! சந்தேகம் கிஞ்சிற்றும் வேண்டாம்" என்ருன்.

"அதைச் சொல்லவில்லை, 'கள்ளங் கபடற்ற வெள்ளை உள்ளத்தவர்' என்று கூறினேன்." என்றாள்.

"ஹேமாவதி ! அதெல்லாம் கிடக்கட்டும். என்னை இங்கேன் அழைத்தாய்?" என்று மறுபடியும் கேட்டான்.

"நானோ மணமாகாத நங்கை. நீங்களும் மணமாகாத ஒரு வாலிபர். அப்படிப்பட்ட ஒருவரை தனித்த இடத்தில் சந்திக்க ஏற்பாடு செய்ததென்றால் அதன் அர்த்தத்தை உணரவில்லையோ?" எனக் கேட்டாள்.

"ஹேமாவதி! இப்பொழுது எனது நிலை வேடிக்கையாகப் பொழுது போக்கும் தன்மையிலில்லை. நான் நாட்டைவிட்டகல வேண்டியவன். ஆதலின் தாமதமின்றி அழைத்த காரணத்தைக் கூறு" என்று அவளின் மனதை அறியாதவன் போல் மொழிந்தான்.

இதனைக் கேட்ட ஹேமாவதி திடுக்கிட்டு, "என்ன? நாட்டைவிட் டகலவேண்டுமோ? ஏன்? எவரால்? அரசாங்கம் உங்களையும் துரத்த முன் வந்துளதோ?" என்று பதைபதைத்துக் கேட்டாள்.

"இல்லை! அரசாங்கம் நிரபராதி! என் தந்தையிட்ட கட்டளை!" என்று அனைத்தையும் ஆதியோடந்தமாய்க் கூறினன். இதனைக் கேட்டு சகிக்காமல் மாற்றாந் தாயின் கெடு நினைவினையும் கொடுஞ் செயலையும் எண்ணி கண்ணீரும் விட்டாள்.

"பெண்மணி! நீ எனக்கு முன்பின் பரிச்சய மற்றவள்! அப்படி யிருக்க எனக்காக நீ வருந்துவது முறையல்லவே!" என்றான்.

"ஐயா! தாங்கள் கூறினது மெய்தான்! ஆனல்.........." என்று நிறுத்தினள்.

"ஆனாலென்ன?" என்று அவன் கேட்க,

"அன்பரே! முன் பின் பரிச்சய மற்றவள் என்று கூறினீர்கள். அது முற்றும் உண்மை. ஆனால் பின்னால் உங்கள் உறவை நாடியே இப்பொழுது இங்கு வரச் செய்தேன்" என்றாள்.

இதனைக் கேட்ட ஜெயசுந்தரன் இன்னும் வார்த்தைகளை விஸ்தாரமாக அறிய எண்ணி, "அப்படி என்ன விசேஷம்?" என்றான்.

"சுந்தரரே! நான் இன்னும் மறைமுகமாகப் பேச விரும்பவில்லை. நீங்கள் ஆதரித்து அங்கீகாரம் செய்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, எனது மன எழுச்சியைக் கூறுகின்றேன். நாம் வயதிலும் தேசிய விஷயத்திலும் மனமொத்திருத்தல் போல காதல் விஷயத்திலும் ஒத்திருந்தால் களிப்புறலாம் என்றெண்ணினேன். தங்கள் சித்தம் எனது பாக்கியம்" என்றாள்.

"ஹேமாவதி! சற்று நன்றாகக் கேள். நான் தாயற்றவன்! செல்வ மற்றவன்! மற்றும் இந்நாட்டைவிட் டகலவேண்டியவன்! ஆதலின் சுற்றமில்லை! துணையில்லை! அப்படியான என்னை நீ நேசிப்பதில் என்ன பயன்? என்னை மறந்திடு" என்று கூறினான். அவன் கண்களில் ஜலம் மள மளவென்று கொட்டியது. தனது திக்கற்ற நிலையை நினைந்து துயரக் கடலில் ஆழ்ந்தான்.

"அன்பரே! வருந்தாதீர்கள்! நான் உங்கள் செல்வத்தைக் காதலித்தவளல்ல! உங்களைத்தான் காதலித்தேன்! உங்களையே பதியாக அடைவேன்! ஒரு கால் தாங்கள் நிராகரித்தால், இந்த ஜென்மத்தில் ஆண்டவனை பூஜித்து மறு

ஜென்மத்திலாயினும் உங்களைப் பதியாக அடையப் பெறு வேன்!'' என்றாள்.

''ஹேமாவதி! என்பால் அத்தியந்த அன்புகொண்டுள்ள உன்னை நான் நிராகரித்தால் நிச்சயமாக ஆண்டவனின் கோபத்திற்காளாவேன்! என்றான்.

''சுந்தரரே! ஒரு வேளை எனது குலப் பிறப்பை அறிந்து நிராகரித்தால்?'' எனக் கேட்க,

''அப்படி அதிலென்ன விசேஷம்?'' என்று கேட்டான்.

''நான் ஒரு வேசி மகள். ஆனால் கற்பைக் களவுகொடுக்க வில்லை. எனது உண்மைப் பெயர் ஜெயவதனி. நீங்கள் பிறந்து வளர்ந்த அந்தக் குபேரக் குடியே எனது பிறப்பூர். எனது தாய் தாசி மோஹனாம்பாளையும், மாமா சுந்தரராஜ ஐயங்காரையும் தாங்கள் ஒரு வேளை அறிந்திருக்கக் கூடும். அவர்கள் குலத்தொழிலில் ஈடுபடும்படி என்னைப் பன்முறை பலவந்தம் செய்தனர். ஆனால் என் சாமார்த்தியத்தினால் தப்பினேன். ஒரு நாள் தந்திரமாக எனது கற்பை உங்கள் தந்தையான சேர்மன் செட்டியாருக்கு விற்க ஏற்பாடு செய் திருந்தனர். உங்கள் தந்தை மிகவும் நல்லவர். அவருக்கு புத்தி புகட்டி யனுப்பி, அப்பொழுதும் தெய்வ கடாக்ஷத் தால் எனது கற்பைக் காப்பாற்றினேன். அதற்கு மேலும் என் தாயுடனிருப்பின் கற்புக்கு பங்கமேற்படுமென் றெண்ணி, அங்கிருந் தகன்று, நடையுடை பாவனைகளை முற் றும் மாற்றி, ஹேமாவதி என்று பெயர் கொண்டு தேச சேவையி லீடுபட்டேன். அப்படியான நாட்களின் ஓர் நன் னாளில் எனது அதிர்ஷ்ட வசத்தாலும் நற்சேவையின் பய னாகவும் உங்களைக் காணும் பாக்கியம் பெற்றேன்.'' என்று தனது வரலாறு முழுமையும் விஸ்தாரமாகக் கூறினாள்.

இதனைக் கேட்ட ஜெயசுந்தரன், "ஹேமாவதி! உன் கற்பை நான் திடமாக நம்பலாமா?" என வினவ, கண்களில் நீர் சொரிய, "பிரபு! என்னை மேலும் வருத்தவேண்டாம். சத்தியமாக நான் கற்பைக் காப்பாற்றியவள். என்னை நம்புங்கள்" என்று கூற, அவளை மார்போடணைத்துத் தழுவி முத்தமிட்டான். சற்று நேரம் இருவரும் மெய் மறந்த ஆனந்தத்திலிருந்தனர்.

பின்பு "காதலி! நாம் இனி இவ்வூரில் வாழமுடியாது. எனது தந்தையின் வாக்கை பரிபாலனம் செய்யவேண்டும். உனது நோக்கமென்ன?" என்று கேட்டான்.

"காதல! வாஸ்தவம் தான்! தாங்கள் எங்கு சென்றாலும் அங்கு நானும் கூட வருவேன். இப்பொழுது தௌலத் தீவில் நமது இந்தியர்களை படாத பாடு படுத்துகின்றனர். அங்குள்ள நம் மக்கள் அடிமைப் படுத்தப்பட்டு அல்லற்படுகின்றனர். அந்த அடிமைகளுக்கு விடுதலை யளிக்க முயல்வது நம் போன்ற சகோதர சகோதரிகளின் கடமை. எனவே, நாம் வேற்று நாடு செல்வதிலும், அங்கு சென்று கிளர்ச்சி செய்து, அடிமைகளுக்கு வெற்றி யளித்தால் பெரும் புண்ணியமாகும்" என்றாள்.

"காதலி! மெச்சினேன்! அவ்வாறே செய்வோம்." என்று கூறி ஒருவரை யொருவர் மார்புறத் தழுவிக்கொண்டனர்.

இந்தியாவிற்கும் தௌலத் தீவிற்கும் இடையே யுள்ள சிறிய கடல். அலைகள் வானோக்கி எழுந்து ஒன்றோடொன்று மோதி பயங்கரமா யிருந்தன. மின்ன லொளி கண்ணைப் பறித்தது. இடியோசை காதை உடைத்தது. கனத்த மேகம் காரிருளினும் கருப்பாகியது. மழை முன்னும்

பின்னுமாக சோவென்றடித்தது. இரவு சுமார் பன்னிரண்டு மணி யிருக்கலாம். நடுக் கடலில் ஒரு சிறு தோணி தத்தளித்தது.

தத்தளித்த தோணி அலைகளால் ஒரு பனை உயரத்திற்குக் கொண்டு செல்லப்படும். மறு வினாடி தடாலென்று தாழ்ந்து விழுகும். இந்த விதமான ஆபத்தில் அல்லற்பட்டுக் கொண்டிருந்த தோணியில் ஒரு பெண்ணும் மூன்று ஆண்களுமே யிருந்தனர். மூவரில் இருவர் தோணி யோட்டிகள். மிஞ்சியவர்கள் நமது ஜெயசுந்தரனும் அவனின் அன்பிற்குரிய காதலி ஹேமாவதியு மாவார்கள்.

மிகப் பெரியதோர் அலை மோதியது. படகோட்டிகள் இருவர்களும் நீரில் வீழ்ந்துவிட்டனர். அவ்விருவர்களின் கதி யாதாகிற்றென்று அறிகிலோம். மாலுமி யற்ற கப்பலின் நிலைமை யடைந்த தோணி முன்னும் பின்னும் மேலும் கீழுமாக அல்லற்பட்டது. அத்தருணத்தில் ஹேமாவதி ஜெயசுந்தரனை இறுகக் கட்டிப் பிடித்துக் கொண்டு, "காதலா! என்னென்னமோ எண்ணி யிருந்தேன்! ஆனால் தெய்வம் நமக்கு விரோதியாகி விட்டது! அவனன்றி ஓர் அணுவும் அசையாது! இப்பொழுதோ அல்லது இன்னும் சிறிநேரத்திலோ நாம் இறப்பது நிச்சயம். நாதா! மறு ஜென்மத்திலாவது நாம் கூடி வாழ இறைவன் அருள் பாலிக்கட்டும்! இதோ எனது அன்பிற்குரிய கடைசி முத்தங்கள்! ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று கூறி கட்டித் தழுவி முத்தமிட்டாள்.

அட அநீதியே! மீண்டும் ஒரு பெரிய அலை எழுந்தது. தோணி அலையால் ஒரு பக்கம் சாய்ந்தது. ஹேமாவதியைக் கடல் கொண்டது. தனித்திருந்த ஜெயசுந்தரன் ஓவென ஓலமிட்டான்; ஆவென்றலறினான். "ஐயோ! எனது நிலை

இப்படியுமா ஆகவேண்டும்? ஏ, ஹேமாவதி! நீ அபாக்கிய வதி! என்னைக் காதலித்திராவிட்டால் நீ இக்கதிக் குள்ளாக வேண்டியதில்லையே! ஏ, தெய்வமே! நீ இருக்கின்றனையோ? இல்லை, செத்துவிட்டனையோ? எனது நெஞ்சை அறிந் திலையோ? இப்பாவி படும் பாடு உனக்குச் சம்மதமோ? நான் எக்குறை செய்தேன்? என்பால் எப்பிழை கண்டாய்? அந்தோ! விதியே!'' என்று விம்மி யழுதான். பின்பு சுய உணர்வு பெற்றுன். கட கடவென்று நகைத்தான். "மாயப் பிரபஞ்சமடி'' என்று வாய்விட்டுக் கூறினான். மீண்டும் நகைத்தான். பின்பு அழுதான். "சிச்சீ! நான் ஏன் அழு கின்றேன்? எதை நினைந்தழுவது? சண்டாளன் பிறந்ததை நினைந்தழுவனே! மண்ணில், பெற்றதாய்க்கு,—பாலூட்டிச் சீராட்டி, 'கண்ணே! மணியே!' என்று தாலாட்டி தொட்டி லிட்டு வளர்த்த தாய்க்கு இடுகாட்டில் அனலிட்டதை நினைந் தழுவனே! தந்தை,—தாரமிழந்த தந்தை கிழப் பருவத்தில் பணப் பெருக்கால் ஒரு குமரியை மணந்ததை நினைந்தழு வனே! அச்சிற்றன்னை என்னைக் காதலித்த கிராதகச் செயலை நினைந்தழுவனே! அதற்காக நான் பிறந்த பொன்னுட்டை விட்டகன்றதை நினைந்தழுவனே! அந்தோ! ஹேமாவதியின் அன்பை நினைந்தழுவனே! அவள் கட்டித் தழுவியிட்ட முத் தத்தை நினைந்தழுவனே! அவள் பிரிவை நினைந்தழுவனே! ஏ! கடவுளே! எத்தை நினைந்தழுவேன்? எவ்வாறு உய்வேன்? இதோ! இறக்கத் தயார்! உயிர்விடத் தயார்!!'' என்று கூறி வடிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, சமுத்திரத்தை நோக்கி,

"ஏ, நீர் மடந்தையே! நீயே கதி! தாயை இழந்தேன்! தாரணியை இழந்தேன்! உயிரனைய காதலியை இழந்தேன்! இப்பொழுது எனக்கு இங்கு ஆற்றுவாரில்லை! தேற்றுவா

யில்லை! நீயே கதி! உனையன்றி எனக்கு வேறொருவரில்லை. நிலமடந்தை என்னை நிராகரித்து விட்டாள்! ஆதலின் அண்டி வந்த என்னை ஆதரித்திடு." என்று கூறி தோணியிலிருந்த ஜெயசுந்தரன் தடாலென்று கடலில் வீழ்ந்தான்.



## ஐந்தாம் அத்தியாயம்.

தௌலத்தீவில் ஆண்டிவால்சந்தில் ஒரு அறையில் ஒரு யௌவன மாது ஒரு படுக்கையில் கிடந்தாள். சற்று நேரத்தில் அதினின்றும் எழுந்து அந்த அறையின் நாற்புறமும் நோக்கினாள். அவள் முகம் மாறுபட்டது. ஏதோ கலவரத்தால் பீடிக்கப்பட்டவள்போல் தோன்றினாள். "நான் உயிருடனா இருக்கின்றேன்? இங்கு எவ்வாறு வந்தேன்? இது யாருடைய வீடு? வெளியில் செல்லவோ வழி தெரியவில்லையே? இதென்ன? மர்மமாகவன்றோ இருக்கின்றது!" என்று பலவாறு பிரலாபித்து சோர்வுற்று மறுபடியும் படுக்கையில் வீழ்ந்தாள்.

சின்னேரம் கழிந்து கண்விழித்துப்பார்த்தாள். தான் ஒரு ஆடவனின் மடிமீது நித்திரையிலிருந்ததாக அறிந்தாள் திடீரென எழுந்தாள். அவளின் கால்கள் சோர்வுற்றிருந்ததினால் திடீரெனத் தரையில் வீழ்ந்தாள். கண்மூடினாள். பின்னும் சிறிது நேரத்தில் விழித்தாள். அப்பொழுதும் அவ்வாடவனின் மடிமீது நித்திரையிலிருப்பதாக உணர்ந்தாள். அவள் கண்கள் அவ்வாடவனைக் கூர்மையாக நோக்கின. அவளை அறியாமலேயே, "தாகம்... தாகம்" என்று கூறினாள். உடனே அவளை மடிமீது படுக்கவைத்திருந்த ஆடவன்

எழுந்து ஒரு கண்ணாடி டம்ளர் நிறைய சாராயம் கொண்டு வந்து கொடுத்தான். அதனைக் கரத்தில் வாங்கினாள். உற்று நோக்கினாள். கண்ணை மூடினாள். பிறகு திறந்தாள். திடீரென்று கண்ணாடி டம்ளரை தரையில் வீசினாள். டம்ளர் உடைந்தது. அதிலிருந்த சாராயம் வீணாகியது. இவள் ஏன் அவ்வாறு செய்தாளென்பதை அவ்வாடவன் உணர மாட்டாமல் அவளை நோக்கினான். இதனைக் குறிப்பாலறிந்த அவள், தளர்ந்த குரலில், "மதுபானம்! கொடியமதுபானம்! குடிகெடுக்கும் மதுபானம்! ஏழைமக்களை எலும்புந்தோலுமாக்கும் மதுபானம்! வேண்டேன்! தாகம்...தாகம்! தண்ணீர்.... தண்ணீர்!" என்றாள். உடனே குடிதண்ணீர் கொண்டுவந்து கொடுத்தான். அதனை அன்புடன் பருகிய நங்கை சற்று மூர்ச்சை தெளிந்தெழுந்தாள். அவ்வாடவனை உற்று நோக்கினாள். அவள் கண்கள் நன்றி செலுத்துவனபோல் தோன்றின.

வாசகத் தோழர்கள், அவர்களின் வருங்கால சம்பாஷணையிலிருந்து அவ்விருவரையும் அறிய சந்தர்ப்பமிருப்பதால் நேர்முகமாகக் கூறாமல் கதையை மேல்நோக்குவோம்.

களைப்புத் தெளிந்த நங்கை அவ்வாடவனை நோக்கி, "ஐயா! நான் எங்கிருக்கின்றேன்? எவ்வாறு இங்கு கொண்டு வரப்பட்டேன்? என் அன்பிற்குறிய காதலர் உயிருடன் இருக்கின்றாரா? தாங்கள் யார்?" என்று பல கேள்விகளைக் கேட்டாள்.

அவ்வாடவன் ஒன்றும் விளங்காதவன்போல் தோன்றினான். சற்று கழிந்தபின், "பெண்ணே! உனக்கு காதலன் ஒருவன் இருக்கின்றானா?" என வியப்புறக்கேட்டான்.

"ஆம்!...ஆம்! அவர் இங்கில்லையோ? நான்மட்டுமோ இங்

இருக்கின்றேன்! ஐயோ! நாதா! நாதா! நீங்கள் எங்கிருக்கிறீர்கள்? காதலா! உயிருடன் இருக்கின்றீர்களா? உங்களை மறுபடியும் காணும் பாக்கியம் இச் சண்டாளிக்குக் கிட்டுமா?" என்று பலவாறு புலம்பியழுதாள். அவ்வாடவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. "அம்மா! உனது விருத்தாந்தமென்ன?" என்று கேட்டான்.

"ஐயா! இந்தப்பாவியின் விருத்தாந்தத்தைக் கேட்காதீர்கள்! கேட்டலே பாபம்! நான் இனி ஒருக்கணமும் உயிர் வாழச் சம்மதியேன்! என்னை இப்பொழுதே கொன்றுவிடுங்கள். உயிர் எனக்கொரு பாரமாகிவிட்டது! என் உயிரைப் பிரித்துவிடுங்கள். புண்ணியமுண்டு! உங்கள் மனைவி மக்கள் நீடூழி வாழ்வர்" என்று கூறி வருந்தினாள்.

"அம்மா! வருந்தாதே! நீ யாரென்பதை என்னிடம் கூறின் ஒருவேளை நன்மை ஏற்படலாம்." என்றான்.

"ஐயா! இப்பாவி ஒரு அனாதை. எனது காதலர்... ஒரு நாடு கடத்தப்பட்டவர்—நாங்கள் இருவரும்...தோணியிலேறி....தெளலத் தீவிற்கு......பிரயாணமானோம்.....கொடிய காற்றும் மழையும்....இடியும் மின்னலும்....புயலும் அலையும் எங்களைக் கவலைக் கடலில் புகுத்தின. தோணி ஊசலாடுற்றது. தோணியோட்டிகள்... கடலில்....வீழ்ந்தனர்...பாவிகள் எங்களைக் கரைசேர்க்க எண்ணிய....அவர்கள்....கதி யாதாயிற்றோ! மற்றொரு புயல்....என்னை....என்....காதலரினின்றும்....பிரித்து....கடலில்....தள்ளியது....என் காதலர்....அருமைக் காதலர்.....கதி....யாதோ? அறிகிலேன். என்.....பெயர்.... ஹேமாவதி. என் அன்பர்...பெயர்.....ஜெய....சுந்த.....ரன். அவர் எங்கே?" என்று ஓவென்றலறியழுதாள்.

"பெண்ணே! வருந்தாதே! ஒருவேளை நீ உயிருடன்

கரையில் கிடந்ததுபோல், அவனும் எங்கேனும் ஒதுக்கப் பட்டிருப்பான். அவனைத் தேடிப்பார்க்கச்செய்கின்றேன்." என்று கூறி ஒரு விசைக்கருவியை அழுத்தினான். மணியடித்தது. ஒரு ஆடவன் அங்கு வந்து கைகட்டி நின்றான். "சடுதியில் நல்ல முறையில் ஆகாரம் கொண்டுவா" எனக் கட்டளை பிறக்க அவ்வாறே சிறிது நேரத்தில் கொண்டுவந்தான். ஹேமாவதி கண்ணீரும் கம்பலையுமாய் சிறிதளவு உண்டாள். உண்டபின் "ஐயா! முன்பின் அறியாத என்னிடம் இவ்வளவு பரிவுகாட்டும் தாங்கள் யார்? நான் இருக்குமிடம்?" என்று மீண்டும் கேட்டாள்.

"மாதே! இதுதான் தாங்கள் நாடிவந்த தௌலத்தீவு. இந்த வீதிக்கு ஆண்டிவால் சந்து என்பது பெயர். இப்பொழுது இருக்குமிடம் எனது சொந்தம். நான் இந்த ஊர் மன்னரின் அந்தரங்கக் காரியதரிசி. என் பெயர் ஜான்சன். நானி நினைத்தால் இந்த ஊரில் எதையும் செய்யமுடியும்! நீ இப்பொழுது மிகவும் களைத்திருக்கின்றாய். சற்று களைப்பாறு. வேளாவேளையில் ஆகாரம் இங்கு வரும். நான் உனது காதலனின் செய்தி தெரிந்து இங்கு வருவேன்" என்றுகூறி அந்த அறையிலேயே அவளை விட்டுப் பூட்டிக்கொண்டகன்றான்.

தனித்துநின்ற தையல் துயரங்கொண்டாள். "அறிந்தேன். இந்த ஜான்சன் இந்தியத்துரோகி. இந்தியர்களை இந்த நாட்டைவிட்டோட்ட கங்கணங் கட்டிக்கொண்டிருப்பவன் இவன்தான். அது அவ்வாறாக, உதட்டில் தேனும் உள்ளத்தில் விஷமுமாக என்னிடம் உரையாடினான். என்னிடம் உண்மையில் பரிவுகாட்டுபவனாயின் என்னையேன் தனி அறையில் பூட்டிச் செல்லவேண்டும்? இதில் ஏதோ விஷயமிருக்கிறது! சற்று கவனமாகவே நடந்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால் ஒருவேளை ஆபத்தேற்படினும்

ஏற்படலாம்.'' என்று தன்னுள் ஒருவிதமான அபிப்பிராயங் கொண்டாள்.

இது இவ்வாறாக, தௌலத்தீவு இந்தியர்களைச் சற்று கவனிப்போம். கெய்சர் வீதியில் ஒரு மாடிவீட்டின் மேன் மாடியில் எண்ணற்ற இந்தியர்கள் குழுமியிருந்தனர். அப் பொழுது தேகதிடமும் மனோவன்மையும், முக வசீகரமும் கொண்ட ஒரு யௌவன வாலிபன் எழுந்து,

''சகோதரிகளே!

சகோதரர்களே!!

நான் இவ்வூருக்குப் புதியவன். என்றாலும் என் தாய் நாட்டு மக்களாகிய நீங்கள் படும்துன்பங்களைப் பத்திரிகைகள் மூலம் அறிந்தேன். அறிந்தபின் அடிமையில் வாழும் உங் களை விடுதலை செய்யவேண்டும் என்று எண்ணியே இங்கு வந்தேன்.

நீங்கள் உங்கள் திரவியத்தை உங்கள் நன்மையைக் கருதி இந் நாட்டில் போட்டிருப்பினும், சிறப்பாக இத்தீவி லுள்ள சுதேசமக்களே மிகுதியும் பயனடைகின்றனர். இதனை நன்கறிந்திருந்தும் சர்க்கார் குறுகிய நோக்கமுடைய பலரின் தூண்டுதலால் உங்களை அடிமைகளாக இந்நாள்வரை நடத் தியதோடுமட்டுமல்லாமல், இப்போது நாட்டைவிட்டோட் டவே முனைந்திருப்பது பெரும் வியப்பாகும்! இந்த நாட்டின் செழுமைக்கு முதற்காரணமாகவுள்ள உங்களை தெய்வம் போல் பாவிக்கவேண்டியதிருக்க, அதனை நினையாது கேவ லம் அடிமைகளாக எண்ணி மிருகங்களைப்போல் நடாத்து வது மிகமிக வருந்தற்பாலதாகும். அந்தோ கேவலம்! நினைந் தால் நெஞ்சம் உருகவில்லையோ? சொந்த நாடும் அடிமை நாடு! வேற்று நாட்டில் இந்தியர்களும் அடிமைகள்!! அட அநீ

தியே! பிறந்த இடத்திலும் அடிமை! புகுந்த இடத்திலும் அடிமை!!

பாரதமக்களே! இவற்றிற்கெல்லாம் காரணமென்ன? உங்களுக்குள் ஒற்றுமையில்லை! பேதாபேதம்! பேதமகற்றி ஒற்றுமைகொண்டு, 'எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் இந்திய மக்கள்' என்ற சிந்தையுடன் முன் வருவீர்களாயின், நம்மை ஓட்ட முனைந்த அவர்களை நாம் ஓட்டுவோம்! நம்மை அடிமைகொண்ட அவர்களை நாம் அடிமைகொள்ளுவோம்!! ஒற்றுமையில்லாத தோஷத்தால் நாம் அடிமையில் அல்லற்படுகின்றோம்.

சகோதர சகோதரிகளே! அவ்வாறு முன்னணிக்கு வர, நாம் கூடிப்பேசி ஒருவர் கருத்தை மற்றவர் அறிய ஒரு ஸ்தாபனம் வேண்டுவது அவசியம். அடிமைத்தனம் நீங்குவதற்காக அமைக்கவேண்டியதிருப்பதால் அதற்கு 'அடிமைகள் நிவாரணச்சங்கம்' என்று பெயரிடுதல் பொருந்தும்.'' என்று கூறி அமர்ந்தான். அடுத்தாற்போல் ஒரு செட்டியார் எழுந்து,

''சகோதர சகோதரிகளே! இப்பொழுது பேசிய அன்பர் விஷயத்தை விளக்கமாகக் கூறினர். அவர் கூறியதுபோல் நாம் ஒற்றுமைப்பட்டால் வெற்றி நமக்கேயென்பது திண்ணம். சிறிதும் ஐயம் வேண்டாம். அதற்கு ஒரு ஸ்தாபனம் வேண்டுவதும் மிகவும் அவசியம். அதற்கு 'அடிமைகள் நிவாரணச்சங்கம்' என்று பெயரிடுதல் சாலப்பொருந்தும். அப்படியான சங்கத்திற்கும் நம் எல்லோருக்கும் தலைவராக, முன்பு பேசிய அன்பரை பிரரேபிக்கின்றேன். வாடிக்கிடந்த தாமரை மலர்கள்போன்ற இந்தியர்களாகிய நமக்கு உதய சூரியன்போல் தோன்றி நம்மை மலரச்செய்த அந்த அன்பருக்கு காலத்தில் போந்தமை குறித்து 'காலக்கதிரவன்'

என்ற பெயரிடுதல் பொருந்துமென்றெண்ணுகிறேன்.'' என்று கூறி அமர்ந்தார்.

அடுத்தாற்போல் தேயிலைத்தோட்ட இந்தியக் கூலி ஒருவன் எழுந்து,

"சவோதரிங்களே! சவோதரங்களே! இப்ப இங்காலே முன்னாலே செட்டியாரு ஐயாவு பேசியத்தை நானு ஆமாண்ணு சொல்லறேன். நீங்களு பெரியமனசு பண்ணிக்கிட்டு ஆமாண்ணு சொல்லவேண்டுமெண்டு தாளுமையுடனுங்க ஒங்களைக் கேக்கிறேங்க'' என்று கூறி அமர்ந்தான்.

எங்கும் கரகோஷமும் "அடிமை ஒழிக'' என்ற தொனியும், "காலக்கதிரவனுக்கு ஜே!'' என்ற பேராரவாரமும், "இந்தியர் வாழ்க'' என்ற கோஷமும் வானளாவிக் கிளம்ப, அன்றய நிகழ்சி ஒருவாறு முடிவுறலாயிற்று.

இது இவ்வாறாக ஜான்சனுடைய அறையிலடைபட்ட ஹேமாவதியை நோக்குவோம். தனது தனிப்பட்ட நிலையை எண்ணி எண்ணி ஏங்கினாள். என்செய்வதென்று விளங்கவில்லை. உரலில் அகப்பட்டபின் உலக்கைக்குத் தப்பமுடியுமோ வென்றெண்ணினாள். தனது விதியின் விளைவை எண்ணி விம்மினாள். வெய்துயரடைந்தாள்.

இந்த நிலையில் ஜான்சன் உள் நுழைந்தான். இவன் வரவைக் கண்ட ஹேமாவதி, "ஐயா! அவரைக் கண்டீர்களா? அவர் உயிருடன் இருக்கின்றாரா?'' என்று ஆவலாய்க் கேட்டாள்.

"அவனாவது? உயிருடனாவது? தேடித் தேடியலைந்தும் தென்படவில்லை! நேற்று செம்படவர்கள் கடலிலிருந்து திமிங்கலம் போன்ற பெரியதொரு மீனைப்பிடித்து வந்தார்களாம்.

அதனை வெட்டியபொழுது அதன் உடலினுள் மனிதனுடைய அவயவங்கள் பல காணப்பட்டனவாம். ஒரு வேளை அவன் உனது காதலனாக இருக்கலாமென்றெண்ணினேன்'' என்று கூறும்பொழுது, ஹேமாவதி, "ஆ! காதலா! என்னைப் பிரிந்து இயமனுலகடைந்தீரோ?'' என்று கூறி அடியற்ற நெடுமரம் போல் தரையில் வீழ்ந்து பிரக்ஞை இழந்தாள். மூச்சுப் பேச்சில்லை. பிணம்போலானாள். நீண்டநேரத்திற்குப்பின் சிறு மூச்சு ஓட ஆரம்பித்தது. பின்னேரத்தில் களைப்புத் தெளிந்து எழுந்து ஜான்சனை நோக்கி,

"ஐயா! முன்பின் அறியாத எனக்கு நீங்கள் செய்த பேருதவிகளை இறந்தும் மறவேன். தாங்கள் தருமசொரூபி! தயாநிதி! கருணைக்கடல்! எனது மனமார்ந்த வந்தனத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்! நான் போய்வருகிறேன். என்னை வெளியில் அனுப்புங்கள்.'' என்று கேட்டாள்.

இதனைக்கேட்ட ஜான்சன் கொல்லென்று நகைத்து "உன்னை அவ்வளவு சுலபத்தில் விட்டுவிடவா இவ்வளவு கஷ்டப்பட்டேன். அது முடியாத காரியம். நான் உன்னை என் மனமார நேசிக்கின்றேன். நீ என்னை ஏற்றுக்கொண்டேயாக வேண்டும்.'' என்றுரைத்தான்.

"சே! என்னவார்த்தை கூறினாய்? அரசரின் அந்தரங்கக் காரியதரிசியென்ற மமதைபோலும்! பிறர் பொருளை இச்சித்தல் மகாப்பாபம்! காமக்கசடனே! நான் உயிரை வெறுத்தவள்! எதற்கும் அஞ்சேன்! உன்னை ஒரு துரும்பாகவே மதிக்கின்றேன். சகோதரிக்கொப்பான நிஷ்களங்கமான என்னிடத்தில் மதியிழந்து என்ன வார்த்தை மொழிந்தாய்? நீ பேயன்! அறத்தை மறத்தல் அவமானமென்பதை நீ அறிதல் வேண்டும். உனது கொடுஞ்சொற்கள் எனக்கு ஆத்திரத்தை

யும் பலத்தையும் அளிக்கின்றன. வீணில் பெரும் பழிபாவத்திற்காளாகாதே! ஒரு பெண்,—அதிலும் என்போன்ற ஒரு கற்புள்ள நங்கை, 'ஐயோ' என்ருல் அப்பொழுதே உன்னை பாபம் பீடிக்கும்! எழுபிறப்பிலும் நீங்காது? மதியை இழப்பது மனிதனுக்கு,—அதிலும் ஒரு உயரிய ஸ்தானத்திலுள்ள உனக்கழகல்ல." என்ருள்.

"ஹேமாவதி! நீயொரு நல்ல யுவதி! உன்மேல் நான் கொண்ட மையலை அகற்ற முடியவே முடியாது! நீ என் இருதயத்தில் புகுந்துவிட்டாய்! அதனை அகற்றுவது ஆகாத காரியம். நீ என்னிடமிருந்து தப்பிச்செல்ல ஒருபொழுதும் முடியாது. ஹேமா! உனது காதலனும் இறந்தான். உன் போன்ற யுவதி காதலனற்று இன்புறுவதெங்ஙனம்? இளமையும் பருவமும் நிலையற்றவை! அவைகளைப் பாழாக்குதல் பாபம். வீணில் பிடிவாதம் செய்யாதே. விதியை நினைந்து வருந்தாதே! ஆதலின் என் வார்த்தையைத் தட்டாதே" என்று கூறி அவளை அதிகமாக நெருங்கினன்.

"காமவெறிகொண்ட கசடனே! நீயும் ஒரு ஆடவனு! கிட்டவராதே! எட்டிநில்! உன்னுல் வெற்றிபெறமுடியாது! நயத்தாலும்சரி, பயத்தாலும்சரி உனது எண்ணம் பூர்த்தியாகாது. நீ பலாத்காரம்செய்ய முற்பட்டால் நான் பிராணத்தியாகம் செய்துகொள்ளுவது நிச்சயம். இது சத்தியம்." என்று கூறி இரண்டடி பின்னகர்ந்தாள்.

ஜான்சன் முன்னிலும் சற்று அதிகமாக நெருங்கி, "ஹேமாவதி! என்னைக் கொள்ளைகொண்டகாதகி! அடி பாதகி! உன்னெஞ்சென்ன கல்லா? கல்லேனும் ஒருகாலத்தில் உருகுமடி! உன் கன்னெஞ்சம் கனியாதோடி? இப்படி அருகினில்வாடி! ஒரு முத்தம் தாடி!" என்று மரியாதையற்றவாறு பேசி அவளை மேலும் நெருங்கினன்.

இச்சொற்களைக் கேட்ட ஹேமாவதியின் இரத்தம் கொதிப்புண்டது. தூண்டிலகப்பட்ட மீன்போலவும், நெருப்பில் வீழ்ந்த புட்போலவும், வலையிற் சிக்கிய பறவைபோலவும் துடிதுடித்தாள். பின்னல் நகர இனி இடமில்லை. எனவே திடமாய் நின்று, "அடாபாதகா! என்னையாரென்று நினைத்தாய்? கற்பைக் காக்கும்பொருட்டு, பெற்றுவளர்த்த தாயையும் துறந்தவள். அப்படிப்பட்ட என்னை உன் எண்ணத்திற்கு இணங்கச்செய்வது முடியாத காரியம். அன்றியும், கற்பின்பொருட்டு நெருப்பில் குதித்த வீர ரஜபுத்திர நாரீமணிகள் பிறந்த பாரத நன்னாட்டில் பிறந்தவள் நான்! உன் காரியம் கைகூடாது" என்று கூறும்பொழுது எட்டிப் பிடித்தான். அத் தருணத்தில் தனது மனபலத்தால் ஹேமாவதி அவனை உதறித்தள்ளி உதையும் கொடுத்தாள்.

உதைபட்ட ஜான்சன் எழுந்து, "ஹேமாவதி! என் காதற்கிளியே! தேனே! இன்பவாரியே! உன் கால் என்மேல் பட்டமாத்திரத்திலேயே என் உடலெல்லாம் பூரித்துவிட்டது. உன் பவளச் செவ்வாயால் ஒரு முத்தமிட்டால் அதுவே சொர்க்கசுகம்! அதுவே இந்திரபோகம்! கண்மணி! என்னை கலங்கவிடாதே! ஓகோ! அறிந்தேன்! ஒருவேளை இப்பொழுது உன்னை ஆதரித்து, இச்சை பூர்த்தியானதும், நிராகரித்துவிடுவேனென்னும் எண்ணம்போலும்! ஆம்!.... ஆம்!! அப்படித்தானிருக்குமென்றெண்ணுகிறேன்! பைங்கொடியே! சித்திரப்பாவையே! ரத்தினமே! எல்லோரையும் போல என்னை எண்ணிவிடவேண்டாம்! 'மோகம் முப்பது நாள், ஆசை அறுபதுநாள்' என்பார்கள். ஒருவேளை அதனை எண்ணிப் பயந்திருக்கலாம்! வேண்டாம்!——வேண்டாம் சத்தியமாகச் சொல்லுகிறேன்! உன்மேல் நான் கொண்டது காமமல்ல—காதல்! மோகமல்ல—அன்பு! நீயே என் உடல்!

நீயே என் உயிர்! நீயே என் சுற்றம்! நீயே என் துணை! நீ விரும்பினுல் எனது அரசரைக்கொன்று நான் அந்த ஸ்தானத்தைப் பெற்று உன்னை அரசியுமாக்குவேன்! கண் மணி! ஹேமா! இன்னும் வர்மமா! எங்கே ஒரு முத்தம்'' என்று கூறி தனது கன்னத்தை அவளின் பவளச் செவ்வா யினிடம் கொண்டுசென்ருன்.

இவையனைத்தையும் நாராசம்போல் ஏற்ற நங்கை, அவனைக் கைப்பிடியாய்ப் பிடித்துத்தள்ளி, "அடே பாதகா! இன்னும் உனக்கு அறிவிலையோ! நான் என் இதயத்தின் இறுதிச் சொட்டுஇரத்தம் சிந்தும்வரை கற்புக்காகப்போராடு வேன். வேண்டுமானல் இப்பொழுதே என்னைக் கொன்று விட்டு அதன்பின் உயிரற்ற எனது உடலை என்னவேண்டு மாயினும் செய்துகொள்! இந்த உயிர் உடலில் இருக்கும் வரை உனதெண்ணம் பூர்த்தியாகாதவண்ணம் போராடியே தீருவேன்'' என்று கடுமையாய் மொழிந்தாள்.

இவ்வாறு கூறக்கேட்ட ஜான்சன் பலவந்தம் பயனளிக் காதென்றெண்ணி, வேறுசமயத்தில் வந்தால் ஒருவேளை மனம் மாறுபட்டு தன் இச்சைக்குடன்படுவாளெனக்கொண்டு அறையைப் பூட்டிக்கொண்டு வெளியேறினுன். தனித்து விடப்பட்ட ஹேமாவதி, "ஆ! தெய்வமே! நீயன்றி எனக்கு வேறு கதியில்லை! என் கற்பைக் காப்பாற்றவேண்டும்.'' என்று கூறி சோர்வுற்று வீழ்ந்தாள்.



## ஆறும் அத்தியாயம்.

**மா**லைநேரம். தௌலத்தீவின் மன்னர் தனது அரண் மனையின் பின்புறமுள்ள உத்தியானவனத்திலுள்ள சலவைக் கல்லாசனமொன்றில் அமர்ந்திருந்தார். மாலை வெயிலின்

பொன்னிறக் கிரணங்கள் மனதைக் கவரும்வண்ணம் திகழ்ந்து பிரகாசித்தன. அவ்வனப் பறவைகளின் ஆர்ப்பரிப்பும், மலர்ச்செடிகளினும் கனிமரங்களினும் ஊடே ஓடும் தென்றலின் இனிமையும் உள்ளத்தைப் பரவசப்படுத்துமாறிருந்தன. என்றாலும் மன்னர் ஏதோ சிந்தனைகொண்டு முகவாட்டத்துடன் சிலைபோல் வீற்றிருந்தார்.

இவ்வாறான நேரத்தில் அவருடைய அந்தரங்கக் காரிய தரிசியான ஜான்சன் அங்குவந்தான். அரசனின் முகமலர்ச்சியின்மைகண்டு பலபல எண்ணினான். ஆயினும் ஒருவாறு நிம்மதியான மனத்துடன்,

"அரசே! யாதுகாரணம்? ஏதோ சிந்தனை செய்து கொண்டிருப்பதாகத் தோன்றுகிறதே?" என்று கேட்டான்.

"ஜான்சன்! போதும்! நிறுத்து! உனது வார்த்தைகள் எனது செவிகளுக்கு வேண்டாம்! உன்னாலல்லவோ நான் இவ்வாறு சிந்திக்கவேண்டியதாகின்றது" என்று கண்களில் தீப்பொறி பறக்கக் கூறினார் அரசர்.

"அரசே! இதென்ன புதுமை! ஒன்றும் அறியாத என்னிடம் ஏன் இவ்வளவு கோபம்?" எனச் சற்று பணிவுடன் கேட்டான் ஜான்சன்.

"போதும்....போதும்! இனி உன் நட்பு எனக்கு வேண்டாம்!" என்றார் மீண்டும் அரசர்.

"மன்னர் பெருமானே! என்னவிந்தை? என்னையா வெறுக்கின்றீர்கள்? இது தகாது? நான் என்ன அபராதம் செய்தேன்?" எனக் கேட்டான்.

"ஜான்சன்! அதிகம் வார்த்தையாடவேண்டாம். இனி உன் சகவாசம் வேண்டேன்" என்றார் அரசர்.

"அரசே! காரணமின்றிக் காரியம் தோன்ருது. ஆதலின் தாங்கள் என்னை நிராகரிப்பதற்குக் காரணம் காட்டவேண்டும். இல்லாவிடிலோ........" என்று அரைகுறையாய் வார்த்தைகளை நிறுத்தினன் ஜான்சன்.

இதனைக்கேட்ட அரசர், "அடே! அற்பப்பயலே! உன்னால் என்ன செய்யமுடியும்? என்னாலல்லவோ நீ ஒரு மனிதனுகக் கருதப்பட்டாய்!" என்று கடிந்துரைத்தார் அரசர்.

"ஓஹோ! உமக்கு இவ்வளவு தைரியம் வந்ததா? கிடக்கட்டும். இந்த இராஜ்யத்தினாலன்ரோ உமக்கு இவ்வளவு கர்வம். அதை......" என்று அவன் கூறியபொழுது,

"அடே ஜான்சன்! நீ இந்த இராஜ்யத்திலிருந்து என்னை அப்புறப்படுத்துவதற்குள் இந்தியர்கள் முந்திவிடுவார்கள். இந்த தௌலத்தீவின் கீர்த்தியும் பெருமையும், அற்பனாகிய உன்னிடம் நான் நட்புக்கொண்டதால் அழியப்போகின்றது! உன்னை அந்தரங்கக்காரியதரிசியாகக்கொண்டதின் பயனுய் எனக்கும் என் முன்னோர்களுக்கும் அபகீர்த்தி விளையப் போகின்றது." என்று மிகவும் கோபத்துடனும் சற்று சோர்வுடனும் கூறினர் அரசர்.

இப்பொழுது ஜான்சன் சற்று கோபந் தணிந்தான். பலபல எண்ணியபின் சற்று சாந்தங்கொண்டு, "அரசே! அப்படியும் ஒரு சந்தர்ப்பம் இந்தியர்களுக்கு எப்படி வந்தது?" என்று கேட்டான்.

"எல்லாம் உன்னால்தான்! நீ இந்தியர்களை இத்தீவிலிருந்து துரத்தவேண்டுமென்று கூறினுய். அவர்களோ நம் நாட்டில் போட்ட செல்வத்தை விட்டுப்போக மனமற்று பல பல குட்டிக்கலகங்கள் செய்தனர். அதற்காக நாம் பல

கடுமையான சட்டதிட்டங்களை இயற்றி மிருகங்களிலும் கேவலமாக நடத்துகிறோம். ஆனால் இங்குள்ள எல்லா இந்தியர்களும் எவ்விதபேதமுமின்றி ஒன்றுசேர்ந்து ‘அடிமைகள் நிவாரணச் சங்கம்’ என்ற ஒரு ஸ்தாபனமேற்படுத்தியிருக்கின்றார்களாம். அதற்கு யாரோ இந்தியாவிலிருந்து புதிதாக வந்த அதி தீவிர தேசபக்தனொருவன் தலைவனும். அவன் மகா நிபுணனென்று பேசிக்கொள்ளுகின்றார்கள். நாம் நாடிழக்கவேண்டியதுதான். இவ்வளவு கேவல நிலைமைக்கும் மூலகாரணம் நீதான்!'' என்று பழியை அவன்மேல் சுமத்தினார் அரசர்.

ஜான்சன் எள்ளி நகைபுரிந்து, “ஓஹோ! இதற்குத்தானா இவ்வளவு பிரமாதப்படுத்துகின்றீர்கள்! இந்த ஜான்சன் உயிருள்ளவரை நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டியதில்லை.'' என்று தேறுதல் கூறி அகன்றான்.

மறுநாட்காலையில் காலக்கதிரவன் அடிமைகள் நிவாரணச் சங்கத்தில் ஏதோ காரியம் கவனித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது இரண்டு போலீஸ் வீரர்களும் இன்ஸ்பெக்டரும் அங்கு வந்தனர். எதிர்பாராமல் இவர்கள் வரவைக் கண்ட காலக்கதிரவன் என்னவோ ஏதோவென்றெண்ணினான். போலீஸ் இன்ஸ்பெக்டர் அவனை நோக்கி, “நீதானே இச்சங்கத்தின் தலைவனான காலக்கதிரவன்?'' எனக்கேட்க, “ஆம்'' என்று பதிலளித்தான்.

“உன்னை கைது செய்கின்றோம்'' என்றார் “என்ன? கைதுசெய்கின்றீர்களா? ஏன்?'' எனக்கேட்டான்.

“நன்று! ஒன்றும் அறியாதவன்போல் பாசாங்கு செய்கின்றாய்! கொலையை மறைக்க உன்னால் முடியுமா?'' என்று உரத்துக் கேட்டார்.

இதனைக்கேட்ட காலக்கதிரவன் திகைத்து, "என்ன? கொலையா! என்மேல் குற்றமா! இதென்ன அநீதி! நான் நிர பராதி! என்னைக் கைது செய்தல் நீதிக்கு பங்கமேற்படுத்துவ தாகும்." என்று பதைபதைக்கக் கூறினன். இவற்றிற்கெல் லாம் செவிசாய்க்காத இன்ஸ்பெக்டர் போலீஸ் வீரர்களை நோக்கி, "இவன் கைகளில் விலங்கிட்டு ஸ்டேஷனுக்குக் கொண்டு சென்று பந்தோபஸ்தில் வையுங்கள்" என்று கட்டளையிட்டார்.

அவ்வாறே காலக்கதிரவனுக்கு, விலங்கிடப்பட்டு வீதி வழியாக அழைத்துச் செல்லப்பட்டான். வழியில் வந்த ஒவ் வொரு இந்தியனும் தம் தலைவனுக்கேற்பட்ட இந்நிலையைக் கண்டு கண்ணீர் வடித்துச் சென்றனர்.

இது இவ்வாருக, ஜான்சனுடைய காமச்சிறையிலடை பட்ட நமது கதாநாயகியை நோக்குவோம்.

நண்பகலில் ஒரு மாது நமது நங்கைக்கு ஆகாரம் கொண்டுவந்தாள். ஹேமாவதி அவளின் கால்களில் வீழ்ந்து நமஸ்கரித்து,"தாயே! நீயேகதி! என்கற்பைக்காப்பாற்ற உதவிபுரியவேண்டும். கோடி கோடி புண்ணியமுண்டு." என்று கெஞ்சினள்.

"அம்மா! முதலில் ஆகாரத்தை உண். பிறகு பேசிக் கொள்ளுவோம்" என்ருள் வந்த மாது.

ஹேமாவதி ஆகாரமுண்டு தனது களைப்பை மாற்றிக் கொண்டு, அம்மாதை நோக்கி, "தாயே! நீதான் ஆதாரம்!" என்று கெஞ்சினள்.

"என்னல் என்ன உதவி வேண்டும்?" எனக்கேட்டாள் வந்தமாது.

கடுமையான சட்டதிட்டங்களை இயற்றி மிருகங்களிலும் கேவலமாக நடத்தினேம். ஆனால் இங்குள்ள எல்லா இந்தியர்களும் எவ்விதபேதமுமின்றி ஒன்றுசேர்ந்து 'அடிமைகள் நிவாரணச் சங்கம்' என்ற ஒரு ஸ்தாபனமேற்படுத்தியிருக்கின்றார்களாம். அதற்கு யாரோ இந்தியாவிலிருந்து புதிதாக வந்த அதி தீவிர தேசபக்தனொருவன் தலைவனும். அவன் மகா நிபுணனென்று பேசிக்கொள்ளுகின்றார்கள். நாம் நாடிழக்கவேண்டியதுதான். இவ்வளவு கேவல நிலைமைக்கும் மூலகாரணம் நீதான்!'' என்று பழியை அவன்மேல் சுமத்தினர் அரசர்.

ஜான்சன் எள்ளி நகைபுரிந்து, ''ஓஹோ! இதற்குத்தானா இவ்வளவு பிரமாதப்படுத்துகின்றீர்கள்! இந்த ஜான்சன் உயிருள்ளவரை நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டியதில்லை.'' என்று தேறுதல் கூறி அகன்றான்.

மறுநாட்காலையில் காலக்கதிரவன் அடிமைகள் நிவாரணச் சங்கத்தில் ஏதோ காரியம் கவனித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது இரண்டு போலீஸ் வீரர்களும் இன்ஸ்பெக்டரும் அங்கு வந்தனர். எதிர்பாராமல் இவர்கள் வரவைக் கண்ட காலக்கதிரவன் என்னவோ ஏதோவென்றெண்ணினன். போலீஸ் இன்ஸ்பெக்டர் அவனை நோக்கி, ''நீதானே இச்சங்கத்தின் தலைவனான காலக்கதிரவன்?'' எனக்கேட்க, ''ஆம்'' என்று பதிலளித்தான்.

''உன்னை கைது செய்கின்றேப்'' என்றார் ''என்ன? கைதுசெய்கின்றீர்களா? ஏன்?'' எனக்கேட்டான்.

''நன்று! ஒன்றும் அறியாதவன்போல் பாசாங்கு செய்கின்றாய்! கொலையை மறைக்க உன்னால் முடியுமா?'' என்று உரத்துக் கேட்டார்.

இதனைக்கேட்ட காலக்கதிரவன் திகைத்து, "என்ன? கொலையா! என்மேல் குற்றமா! இதென்ன அநீதி! நான் நிரபராதி! என்னைக் கைதுசெய்தல் நீதிக்கு பங்கமேற்படுத்துவதாகும்." என்று பதைபதைக்கக் கூறினான். இவற்றிற்கெல்லாம் செவிசாய்க்காத இன்ஸ்பெக்டர் போலீஸ் வீரர்களை நோக்கி, "இவன் கைகளில் விலங்கிட்டு ஸ்டேஷனுக்குக் கொண்டு சென்று பந்தோபஸ்தில் வையுங்கள்" என்று கட்டளையிட்டார்.

அவ்வாறே காலக்கதிரவனுக்கு, விலங்கிடப்பட்டு வீதி வழியாக அழைத்துச் செல்லப்பட்டான். வழியில் வந்த ஒவ்வொரு இந்தியனும் தம் தலைவனுக்கேற்பட்ட இந்நிலையைக் கண்டு கண்ணீர் வடித்துச் சென்றனர்.

இது இவ்வாறாக, ஜான்சனுடைய காமச்சிறையிலடைபட்ட நமது கதாநாயகியை நோக்குவோம்.

நண்பகலில் ஒரு மாது நமது நங்கைக்கு ஆகாரம் கொண்டுவந்தாள். ஹேமாவதி அவளின் கால்களில் வீழ்ந்து நமஸ்கரித்து, "தாயே! நீயேகதி! என்கற்பைக்காப்பாற்ற உதவிபுரியவேண்டும். கோடி கோடி புண்ணியமுண்டு." என்று கெஞ்சினாள்.

"அம்மா! முதலில் ஆகாரத்தை உண். பிறகு பேசிக் கொள்ளுவோம்" என்றாள் வந்த மாது.

ஹேமாவதி ஆகாரமுண்டு தனது களைப்பை மாற்றிக் கொண்டு, அம்மாதை நோக்கி, 'தாயே! நீதான் ஆதாரம்!' என்று கெஞ்சினாள்.

"என்னால் என்ன உதவி வேண்டும்?" எனக்கேட்டாள் வந்தமாது.

"அம்மா! என்னை இந்த அறையிலிருந்து விடுதலை பெறச்செய்யவேண்டும். எங்காகிலும் தலைமறைவாய்த் திரிந்து தப்பி வாழ்கின்றேன்." என்று வேண்டினாள் ஹேமாவதி.

"பெண்மணி! அது என்னால் முடியாதகாரியம். அவ்வாறு செய்தால் என் தலையே போய்விடும்! ஜான்சன் மிகவும் பொல்லாதவன்" என்று பயந்து மொழிந்தாள் வந்தமாது.

"தாயே! நீ என்போன்ற பல பெண்களுக்கு தாய்போலானவள். என்னையும் உன் பெண்களில் ஒருத்தியாக எண்ணி காப்பாற்றலாகாதா? கோடி புண்ணியமுண்டு! வள்ளலாய்க் கோடி தானம் வழங்கினாலும் ஒரு பெண்ணின் கற்பைக் காப்பாற்றுவதற்கு உதவிசெய்தலுக் கீடாகாது! கருணைகாட்ட வேண்டும்" என்று மிகவும் மன்றாடிக்கேட்டாள் ஹேமாவதி.

அம்மாதரசியின் மனம் சற்று இளகியது. ஆனால் ஜான்சனுக்குப்பயந்தாள். என்றாலும் ஹேமாவதியைக் கைவிட மனதுவல்லை. இங்ஙிலையில் அவளைநோக்கி, "ஹேமா! ஜான்சன் உன்னை என் காவலில் வைத்திருக்கின்றான். அப்படியிருக்க நான் உன்னை வெளிக்கடத்தினால் எனது நிலை மிகவும் மோசமாகிவிடும். ஆதலால் வேறு ஏதாவதொரு வழி தேடிக்கொள்" என்றாள்.

இதனைக்கேட்ட ஹேமாவதி, அம்மாது அவ்வளவுதூரம் இணங்கியது தனது நற்காலத்திற்கோர் அறிகுறி என்று நினைந்து, வேறுவழி யென்னவென்று யோஜித்தாள். ஒன்றும் புலப்படவில்லை. சிறிது நேரத்தில் முகமலர்ச்சிகொண்டு அம்மாதை நோக்கி, "தாயே! கொஞ்சம் விஷம் கொண்டுவர முடியுமா?" எனக் கேட்டாள்.

இதனைக்கேட்ட அம்மாது, "என்ன? விஷமா? தற்கொலை செய்துகொள்ளவோ?" என்றாள்.

"தாயே! இதற்கும் தடைசெய்யாதீர்கள். கற்பழிந்த பின் வாழ்வதினும் அதற்குமுன் தற்கொலை செய்துகொள்ளுவது மேலன்றோ! சற்று தயை கூருங்கள்" என்று வேண்டினாள் ஹேமாவதி.

"பெண்ணே! இதற்கு நான் உடன்படமாட்டேன். என்னபாபம்செய்தேனோ, வயிற்றை வளர்ப்பதற்காக இத்துச்சனிடம் வேலைக்கமர்ந்திருக்கும்படி நேர்ந்திருக்கிறது. இனி ஒரு தற்கொலைக்கும் ஆளானால் எக்கதியடைவது இங்கிருந்து தப்பிச்செல்ல வேறு வழியிருந்தால் என்னைக் காட்டிக்கொடாமல் அதனைத்தேடு. இவ்வாறு நான் கூறிய விஷயம் அந்த ஜான்சனுக்குத் தெரிந்தால் சிரசையேகொய்து விடுவான். ஏதோ யோஜித்துச் செய்துகொள்" என்றாள்.

ஹேமாவதி பல பல எண்ணி இறுதியாக "தாயே! பேனைமைக்கூடும், காகிதமும் அதற்கு ஒரு தபால் தலையுள்ள உறையும் தர முடியுமா? நான் ஒரு கடிதமெழுதித் தருகிறேன். இதனை இந்த ஏழையிடம் அன்புகூர்ந்து தபால் பெட்டியில் சேர்த்துவிடுங்கள். இந்த உதவியைச் செய்வீர்களாயின் நான் உள்ளளவும் உங்களை மறக்கமாட்டேன். உங்களுக்குப் புண்ணியமுண்டு" என்று வேண்டினாள்.

அம்மாதரசியும் ஒருவாறு திடங்கொண்டு, அவ்வாறே கொண்டுவந்து கொடுத்தாள். அவையனைத்தையும் பெற்ற ஹேமாவதி சென்னையிலுள்ள பிரபல துப்பறியும் நிபுணி மிஸ். சரோஜினிக்கு ஒரு கடிதமெழுதி உறையில் போட்டு அம் மாதரசியிடம் கொடுக்க அவள் அதை தபால் பெட்டியில் சேர்ப்பித்தாள்.

இது இவ்வாறாக, கைது செய்யப்பட்ட காலக்கதிரவனை நோக்குவோம். போலீஸ் காரியாலயத்தில் ஒரு மூலையில் முழங்கையைத் தலையணையாக வைத்துப் படுத்தவண்ணம், "ஏ! தெய்வமே! இதுவும் உன் சோதனையோ! இன்னும் என்னென்ன விதத்தில் என்னை துன்புறுத்தப் போகின்றனையோ! இது நீதிக்கும் தர்மத்துக்கும் அடுக்குமோ? ஒன்றும் அறியாத என்னை,—நிரபராதியான என்னை கொலைக்குற்றத்திற்குள்ளாக்கிய இந்த அரசாங்கமும் ஒரு அரசாங்கமா? இந்த அரசாங்கம்,—நீதியற்ற அரசாங்கம்,—நெறியற்ற அரசாங்கம் இன்னும் எவ்வளவு காலத்திற்கு நிலைத்திருக்கப் போகின்றது? 'கேடுவரும் பின்னே, மதி கெட்டுவரும் முன்னே' என்பதற்கிணங்க அழிவிற்கு முன் அதன் அறிகுறி என் மூலம் தோன்றலானது போலும்! நான் இந்தத் தீவில் அடி வைத்தபின் என்னாட்டு மக்கள் ஒற்றுமைப்பட்டு புரட்சியிலீடுபட்டு விட்டனர். நான் இனி இருந்தாலும் இறந்தாலும் காரியமல்ல. எனது பெயர்மட்டும் நிலவுமென்பதில் எட்டுணையும் ஐயமில்லை." என்றவாறு எண்ணி வருந்திக்கொண்டிருந்த பொழுது இரு போலீஸ் வீரர்கள் அவனை யணுகி, அடித்து, அடே காலக்கதிரவா! உன் வாயால், நான்தான் கொலைசெய்தேன்' என்று கூறிவிடு. இல்லாவிடில் இம்சைப்பட நேரிடும். உனக்கும் துன்பம். உன்னைத் துன்புறுத்துவதால் எங்களுக்கும் கஷ்டம்" என்று கூறினர்.

"ஐயாமார்களே! 'மனிதனால் மற்றவனுக்கு ஒருவித கஷ்டமும் நேரிடலாகாது' என்பது தர்மசாஸ்திரம். அதனை நான் நன்குணர்ந்தவன். என்றாலும் என் விருப்பத்திற்கு மாறாக தங்களுக்குக் கஷ்டமேற்பட்டுக்கொண்டிருப்பதை நினைந்து மிகவும் வருந்துகிறேன். ஆனால் உண்மையில் நான் குற்றவாளியல்ல" என்றான்.

“காலக்கதிரவா! இன்னும் சாதனை செய்யவேண்டாம்! குற்றத்தை ஒப்புக்கொள்ளாதவரையில் உன்னை இலேசில் விடோம்” என்று கூறி மீண்டும் அடிக்க ஆரம்பித்தனர் !

துன்பம் பொறுக்காத காலக்கதிரவன் “ஐயா! அநியாய அரசாங்கத்தில்,—அயோக்கிய அரசாங்கத்தில் நல்ல யோக்கியனுக்கு இருப்பிடம் ஜெயில்தான். எனவே நான் கவலைகொள்ளவில்லை. நீங்கள் இப்பொழுது அடிக்கும் அடிகளெல்லாம் என்மேல் தைத்தாலும், அவைகள் என்னை அடித்த அடிகளல்ல! பின் என்ன? நீதியை அடித்த அடிகள்! நெறியையடித்த அடிகள்! வேறல்ல. உங்கள் இஷ்டம்போல் எதை வேண்டுமானாலும் செய்யுங்கள்.” என்று மிக்வும் ஆத்திரத்துடன் மொழிந்தான்.

அன்பர்களே! காலக்கதிரவனின் கூற்றை நோக்கினால் அவன் நிரபராதியென்று தோன்றுகிறதல்லவா? ஆனால் உலகம் பலவிதமன்றோ! நிரபராதி குற்றவாளியாகக் கொள்ளப்படுவதும், குற்றவாளி நிரபராதியாகக் கருதப்படுவதும் இயற்கையில் காண்கின்றோமல்லவா? தௌலத்தீவு மக்களில் ஒருசாரார் காலக்கதிரவன் கொலைசெய்திருப்பானென்றும், மற்றொரு சாரார் அவன் அவ்வாறு செய்திருக்கமாட்டானென்றும் பேசிக்கொண்டனர். ஆனால் எது உண்மை என்பதை பின்னர் அறிவோம்.

போலீஸ் வீரர்கள் மீண்டும் அவனை அடித்து எழச்செய்தனர். வேட்டை நாய்களை வெளியில் பிடித்துச் செல்வது போல் விலங்கு பூட்டப்பட்ட காலக்கதிரவனை சங்கிலியால் பிடித்து தெருத்தெருவாய் அழைத்துச் சென்றனர். ஏழை இந்தியர்களில் பலர் இதனைக் காணச்சகியாமல் இரத்தக் கண்ணீர் வடித்தனர். இவ்வாறான ஊர்வலம் கெய்சர்

வீதியிலுள்ள அடிமைகள் நிவாரணச் சங்கத்தின் அருகில் வந்ததும் காலக்கதிரவன் தன்னையே மறந்து அந்த இடத்தில் சற்று நின்முன். அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக நின்றிருந்த பல இந்திய ஆண் பெண்கள் காக்ஷியளித்தனர். அவர்களை நோக்கிய காலக்கதிரவன்,

''சகோதர சகோதரிகளே!
வருந்தாதீர்கள்! 'ஏழை அழுதகண்ணீர் கூரிய வாளை ஒக்கும்' என்பதை நினைந்து கொள்ளுங்கள். அரசாங்கத்தின் அழிவுக் காலம் நெருங்கிவிட்டது. நான் ஒருவேளை தூக்கிலிடப் படுவேன். நீங்கள் எனக்கு,—இல்லை,—இந்தியர்கள் பெருமைக்காகச் செய்யவேண்டுவது ஒன்றுதானுளது. அதாவது உங்கள் இதயத்தில் விதைக்கப்பட்டுள்ள 'அடிமை நீக்கம்' என்னும் விதை பலன் தருவதற்கு ஒற்றுமையாகிய தண்ணீரை தவருது பாய்ச்சுங்கள்.'' என்றவாறு மேலும் பேச ஆரம்பித்தபொழுது பல அடிகள் ஒருங்கே விழ, அவைகளைத் தாங்கமாட்டாமல் அங்கிருந்தகன்று நடந்தான்.

இக் கொடுஞ்செயலைக் கண்ணுற்ற சுதேசமக்களில் பலருங் கூட, கண்ணீர் சொரிந்து, அங்கு குடியேறிய இந்தியர்களிடம் பச்சாத்தாபங்கொண்டு தேருதல் கூறலாயினர். இந்திய உள்ளங்கள் அனலாய்ப் பொங்கி எழுந்தது. தங்கள் தலைவனுக்கேற்பட்ட அவமானத்தைத் தங்களுக்கேற்பட்டாற் போல் எண்ணி எண்ணி ஏங்கினர். தலைவனற்ற அவர்கள் மாலுமியற்ற கப்பல்போலாயினர். ஆயுதபலமிருந்தால் அப்பொழுதே அத்தீவை தவிடுபொடியாக்கியிருப்பர்! ஆனல்....! இல்லாக்குறைக்கு இப்பொழுதென்செய்வது?

நேயர்காள்! இதுபோன்ற கொடுமையைக் கண்டுசகிப்பதெங்ஙனம்? நீதியற்ற அரசாங்கத்தில்,—நெறியற்ற அரசாங்

கத்தில்,—குடிகார அரசாங்கத்தில்,—தன்னலம் மிகுந்த அரசாங்கத்தில்,—துர்ப்புத்திகொண்ட அரசாங்கத்தில் தர்மம் எங்ஙனம் தழைக்கும்? உண்மை எங்ஙனம் உறையும்? வலிமை கொண்ட அவர்கள் எளிமை கொண்ட நம்மக்களை வாட்டுவது சகஜமாகிவிட்டது. உரலில் அகப்பட்டபின் உலக்கைக்குத் தப்பமுடியுமோ? ஆயினும் அடிமைகொண்டார் வீழ்ச்சியடைவது நிச்சயம்! அடிமைகளாகிய நாம் வெற்றிபெறுதல் திண்ணம்.'' என்றவாறு அங்குள்ள இந்தியர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டனர்.



## ஏழாம் அத்தியாயம்.

ஹேமாவதி கடிதமெழுதிய மறுநாள் மாலையில் சென்னையில் துப்பறியும் மிஸ். சரோஜினி தனது சிறிய பங்களாவில் ஒரு சோபாவில் சாய்ந்த வண்ணம் ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது தபால்காரன் சில தபால்களையும் சமாச்சாரப் பத்திரிகைகளையும் கொடுத்துச் சென்றான். முதலில் நமது கதாநாயகி எழுதிய கடிதம் பிரிக்கப்பட்டது. அதில்,

அன்புள்ள சரோஜினிதேவி!

நமஸ்காரம். நான் சென்னையிலிருந்து இங்கு வந்த வரலாற்றை அறிய நீ அதிக ஆவல் கொள்ளுவாய் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அதனைவரைய இது சமயமல்ல. பின்னர் பேசிக்கொள்வோம்.

இப்பொழுது இந்த தௌலத்தீவில் அரசரின் அந்தரங்கக் காரியதரிசியும், இந்தியர்களை இந்நாட்டினின்றும் வேரற ஓட்டவேண்டுமென்னும் எண்ணங்கொண்டவனுமான

ஜான்சனின் கொடிய வலையில் மிகவும் ஆபத்தான நிலையி லிருக்கிறேன். அவன் ஆண்டிவால் சந்திலுள்ள ரகசிய அறையில் என்னைக் கள்ளச் சிறைப்படுத்தி காமங்கொண் டுள்ளான். இந்த நிலையிலுள்ள என்னைக் காப்பாற்ற இங் கொருவருமில்லை. ஆதலின் உடனே புறப்பட்டு வந்து என் னைக் காப்பாற்றிடுக. எல்லாவற்றிற்கும் உன்னையே முழு தும் நம்பியிருக்கும்,

அன்புள்ள சோதரி,

ஹேமாவதி,

தௌலத்தீவு.

என்று வாசித்தாள். உத்தமி ஹேமாவதி கள்ளச் சிறையில் கடுந்துயரில் கிடப்பதை எண்ணி வருத்தமும் ஆனால் சிநே கிதிக்கு உதவி செய்யும் சந்தர்ப்பம் கிடைத்தது பற்றி சந் தோஷமும் கொண்டு, அன்றே, அப்பொழுதே தௌலத் தீவிற்குப் புறப்பட்டாள்.

மறுநாள் மாலை ஜான்சன் மனதில் ஹேமாவதியின் உரு வம் தோன்றியது. "அடடா! என்ன அழகு! என்ன சௌந்தரியம்! இதுவரையும் நான் யார் யாரையோ இரதி தேவியாகவும், ரம்பை, ஊர்வசி மேனகை முதலியவர்களா கவும் எண்ணி மகிழ்ந்தேன். அது தவறு! 'அழகு' என்றால் ஹேமாவதிதான்! இவள் அழகைப்பெற தேவகன்னிகை களும் போட்டி போடவேண்டியது தான்! அன்று, அவள் என்னை வெறுத்தவள் போல் நடந்த நடையே அவ்வளவு அலங்காரமென்றால், அவள் சரச நடை எவ்வளவு சித்திர மாயிருக்குமோ! அதனைக்கண்டு களிக்கும் பாக்கியம் கிட்டு மோ! ஸ்வர்ணபிம்பம் போன்ற அந்த நங்கையை எண்ணுந் தோறும் என் உள்ளத்தில் காமபாணம் தாக்குகின்றதே!

அடடா! வில்லைப் பழித்த நுதல்! அவள் கொடுமொழி களே எனக்கு பாகுபோல் தித்தித்தனவே! அவளின் இன் சொற்கள் எவ்வகை இன்பம் பயக்குமோ? அவள் நயத் திலும் பயத்திலும் மனமிரங்காள்! அதற்காக விட்டுவிடு வதா? இன்று எப்படியும் அவளைத் தழுவி இன்புறவேண் டும். இல்லாவிடில் அவளைக்கொலைசெய்யவேண்டும்" என்று முடிவுகொண்டு, மடக்குத் துப்பாக்கி யொன்றைக் கையி லெடுத்து,

"ஏ, ஆயுதமே! உன் உதவிவேண்டும்! சமயத்தில் கைவிட்டு விடாதே! அந்த ஹேமாவதி என் விருப்பத்திற் கிணங்காவிட்டால் அவளை உனக்கு இரையாக்கிக்கொள்." என்று வாய்விட்டும் கூறி ஹேமாவதியின் சிறையறையை நோக்கி நடந்தான்.

இது இவ்வாறாக, போலீஸ் காரியாலயத்தில் சுமார் இருபது வயதுள்ள ஆடவனொருவன் ஏதோ சில வார்த்தை களை இன்ஸ்பெக்டரிடம் இரகசியமாகப் பேசினான். நிம்மதி யுடன் சற்றுநேரம் கேட்டுக்கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் நிலைகுலைந்து,

"ஜான்சன் பொல்லாதவன்! அன்றியும் அரசரின் அந்தரங்கக் காரியதரிசி. அரசாங்கமோ, அவன் வைத்தால் குடுமி சிரைத்தால் மொட்டை என்ற நிலையில் நடந்து வரு கின்றது. ஆகவே, நீர் கூறும் விஷயத்தில் நான் தலையிட்டு தோல்வி ஏற்பட்டால் என்னைத் தொலைத்துவிடுவான். ஆக லால்..........." என்று மெல்லவும் மாட்டாமல் விழுங்கவும் மாட்டாமல் பதிலுரைத்தார்.

இவ்வாறு கூறக்கேட்ட வாலிபன், "ஐயா! தங்கள் தொழில் என்ன என்பதை மறந்துவிடவேண்டாம். இது

வாலிபர் உலகம். உங்கள் பதிலால் திரும்ப முடியாது. மீண்டும் வருவதற்கிசையாவிட்டால், உங்கள் நிலை ஆபத்தாகும். என்ன பதில்? காலதாமதம் செய்தால் காரியம் மிஞ்சிவிடும்" என்று கடிந்து கேட்டான்.

"ஐயோ! எனது தொழிலை நான் நன்கறிவேன். ஆனால் ஜான்சன் பொல்லாதவன் என்று தான் எண்ணுகிறேன்." என்று மிகவும் தயக்கத்துடன் கூறினர்.

கேட்ட வாலிபனுக்கு அடக்கமுடியாத கோபம் பொங்கி யெழுந்தது. "ஐயா! இன்றய உலகத்தில் போலீஸ் இலாக்கா ஒன்றுக்கும் உதவாத தெண்டச்சோற்றுப்பட்டாளமாகவேயிருந்து வருகிறது. ஒன்றும் தெரியாத ஒரு அன்னியன் ஊர் வளப்பம் தெரியாமல் ஒரு சிறு தவறிழைத்துவிட்டால் பெரிய ஆர்ப்பாட்டம் செய்வீர்கள். கையிலிருக்கும் ஒன்றிரண்டணுக்களைக் கைப்பற்றுவீர்கள். இது உங்களிடம் சகஜமாகிவிட்டது. ஆனல் உண்மையில் அதிகார தோரணையிலுள்ள ஒருவன் அடாச்செயல் புரிந்தாலும் கண்டும் காணுதவர்கள் போலிருப்பீர்கள்! என்ன உங்கள் நிலைமை! நன்று! இனியும் நான் இங்கு தாமதித்தால் கைக்கொண்ட காரியம் கெட்டு விடும். உங்கள் இஷ்டம்போல் உறங்குங்கள்" என்று சற்றும் பயமின்றி நிந்தித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டான்.

இவ்வாறு அவ்வாலிபன் புறப்பட்டதைக் கண்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவேளை தன் உத்தியோகத்திற்கேதேனும் தீங்கேற்படுமோ வெனப்பயந்து தானும் பின் தொடர்ந்து புறப்பட்டார்.

இது இவ்வாருக ஹேமாவதியை நோக்கிச் சென்ற ஜான்சன், அவள் அடைபட்டுக் கிடந்த அறையை அணுகி

ஞன். இவன் வரவைக்கண்ட ஹேமாவதி கருடனைக்கண்ட சர்ப்பம்போல் பயந்து நடுநடுங்கி சுவரோடு சுவராய் ஒட்டினுள். இதனைக்கண்ட ஜான்சன்,

"கண்மணி! ஏன் இவ்வாறு நடுநடுங்குகின்றாய்? நான் என்ன பேயா? பிசாசா? அஞ்சாதே! நீயோ அனாதை! புருஷனும் அற்ற பூவை! அப்படியிருக்க என்னைச் சேர்வதினுல் என்ன தீங்கு? இப்படி அருகினில் வா!" என்ருன்.

"ஐயா! உங்கள் வேதவாக்கியங்களை நான் வேண்டேன். இஷ்டமில்லை! என்னைத் தொந்தரவு செய்யவேண்டாம். விட்டு விடுங்கள்! புண்ணியமுண்டு!" என்று வேண்டினுள்.

"காதலி! பிடிவாதம் செய்யாதே! கரும்பு தின்னக் கூலி கேட்பாருண்டோ! சௌக்கியமாக வாழலாம்" என்று வேண்டினுன்.

"ஐயா! இதுகாறும் சற்று மரியாதையாகப் பேசினேன். இனியும் நீர் இதுபோல் வார்த்தையாடுவீராஞல் உமக்கு அவமானம் நேரிடும். அதோடல்லாமல் நானும் உயிர் துறப்பேன். அநியாயமாய் ஒரு பெண்ணைக்கொண்டு வந்து அடாச்செயலுக்கு வற்புறுத்துவது முறையல்ல! நீரும் ஓர் ஆண்பிள்ளைதானு? மானமில்லையா? வெட்கமில்லையா?" என்று பலவாறு தூற்றினுள்.

"அடி மாதரசே! நீ என்னவிதம் பேசினுலும் உன்னை விடமாட்டேன்! வீணில் வம்புசெய்யாதே! வா இப்படி! வாயால் ஒருதரம் 'காதலா' என்று கூறிவிடு. நான் போய்விடுகின்றேன். என்று வேண்டினுன்.

"அடே சண்டாளா! என்ன கூறினாய்? அப்பதத்தால் நான் உன்னை அழைப்பதா? போதும் நிறுத்து! எனதன்பிற்குகந்த அருமை நாதனை 'காதலா' என்றழைத்த எனது நா உன்னை அவ்வாறழைக்க ஒருபொழுதும் சம்மதியாது. எட்டிப்போ!" என்று கடிந்துரைத்தாள்.

அதற்கு மேலும் அவனால் தாமதிக்க முடியவில்லை. காய்ந்தமாடு கம்பில் விழுந்தாற்போல் அவள் மேல் புலிபோல் பாய்ந்தான். இதனைச் சகியாத ஹேமாவதி, "ஆ" வென்றலறி, "என்னைக் காப்பாற்றுவாரில்லையா?" என தன்பலங்கொண்டமட்டும் அலறினாள்.

இந்த சமயத்தில் "ஏன் இல்லாமல்? இதோ வந்தோம்!" என்று கூறிய வண்ணம் போலீஸ் இன்ஸ்பெக்டரும் அவரை உடனழைத்துவந்த வாலிபனும் உள் நுழைந்தனர். எதிர்பாராதவிதத்தில் ஏற்பட்ட இச்சந்தர்ப்பத்தால் ஜான்சன் வியப்பும் திகைப்பும் அடைந்து கற்றூண்போல் நின்றான்.

"அடே ஜான்சன்! இதுவரை அடாத பல செயல்களைப்புரிந்தாய். நாங்கள் அதனைக்கண்டும் காணாதது போலிருந்தோம்! இப்பொழுது உனக்குக் கேடுகாலம் ஆரம்பித்துவிட்டது! அனாதைப் பெண்ணொருத்தியை இவ்வாறு ஹிம்சிப்பது முறையா? காமவெறியால் மதியிழந்தனை போலும்" என்று கண்டவாறு தூற்றி அவனை விலங்கிட்டுக் கைது செய்யப்போனார் இன்ஸ்பெக்டர்.

இவையனைத்தையும் கண்டான் ஜான்சன். கோபம் பொங்கியெழ, இன்ஸ்பெக்டரை நோக்கி, "அடே நன்றி கெட்ட நாயே! உனக்கு எவ்வளவு உதவி செய்தேன்! அதனை மறந்து இன்று உண்ட வீட்டிற்கு இரண்டகம்

செய்ய நினைந்தாய்!" என்று கூறி தன் பலங்கொண்டமட்டும் இரண்டொரு குத்துக்கள் விட்டான். இப்பொழுது இன்ஸ்பெக்டர் இனியும் தாமதித்தால் தன் நிலை ஆபத்தாகுமென்றெண்ணி கைத்துப்பாக்கியை ஜான்சன்முன் நீட்டினர். அவனும் தனது துப்பாக்கியைப்பிடித்தான். இவ்வாருக, இவ்விருவரும் ஒருவரை யொருவர் குறிபார்த்து நின்றபொழுது இனியும் தாமதித்தால் பல கொலைகள் நிகழுமென்றெண்ணிய இன்ஸ்பெக்டரை அழைத்துவந்த வாலிபன், ஜான்சனின் கால்களை மெல்லத்தடுக்கிவிட்டான். தடாலென ஜான்சன் தரையில் மல்லாந்தான். துப்பாக்கி கையினின்றும் தவறி வீழ்ந்தது. அருகில் நின்றிருந்த ஹேமாவதி அதனை எடுத்துக்கொண்டாள். இந்தச் சந்தர்ப்பத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜான்சனுக்கு விலங்கிட்டார்.

குழப்பம் ஒருவாறு குறைந்தது. இப்பொழுது ஹேமாவதி, போலீஸ் இன்ஸ்பெக்டரின் பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்தெழுந்து, " என் கற்பைக்காத்த காருண்ய வள்ளலே! உங்களுக்கு இந்த ஏழை என்ன கைமாறு செய்ய்ப் போகின்றேன்." என்று வாய் குளிறப்பேசினள்.

"அம்மா! அவை யாவற்றிற்கும் நான் பாத்திரனல்ல. நீங்கள் இங்கு அடைபட்டுக்கிடந்ததையும் நானறியேன். தாங்கள் இன்னுரென்றும் தெரியேன். இங்கு நான்வரக் காரணமாயிருந்தவர் இந்த வாலிபரே யாவார்." என்று தன்னை அழைத்து வந்த வாலிபரைச் சுட்டிக்காட்டினர் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

" அப்படியா! மெத்த சந்தோஷம்! அவர் யார்? அதனைக் கூறுங்கள் " என்று வேண்டினள்.

இதுகாறும் மௌனமாய் நின்றிருந்த வாலிபன் தனது சிகையை அவிழ்த்து விட்டான். கேசம் நீண்டு நெடுகத் தொங்கியது. பின்னர் தான் அணிந்திருந்த கோட்டைக் கழற்றினன். அப்பால் உள்ளிருந்த சட்டையைக் கழற்றினன். காலங்கி வகையறுக்களையும் கழற்றினன். இந்நேரம் வரை ஆணாக நின்றிருந்த அவ்வுருவம் இப்பொழுது பெண்ணுடையில் தோன்றியது.

இந்த உருவத்தைக்கண்ட ஹேமாவதி தான் காண்பது கனவோ நனவோ வென்றெண்ணினள். கண்களைப் பன்முறை துடைத்துக்கொண்டாள். உடனே அப்பெண்ணுருவத்தைக் கட்டித்தழுவி "ஆ! சரோஜினி! நீயா இதுகாறும் இங்கு நின்றிருந்தது! உனது மாறுவேடத்தை உன்னோடு நெருங்கிப் பழகிய என்னாலேயே கண்டுகொள்ளமுடியவில்லையே! எவ்வளவு பொருத்தம்! நீ ஆணாகப் பிறந்திருக்கவேண்டியவள்! தவறிப் பெண்ணாகப் பிறந்துவிட்டாய்! இன்னும் உள்ளதைச் சொன்னால் ஒருவேளை முகஸ்துதியென்று கூட எண்ணிவிடுவாய்! போகட்டும். இப்பொழுது போலீஸ் இன்ஸ்பெக்டரை அழைத்துக்கொண்டு இங்கு வந்திராவிட்டால் நான் என் உயிரைமாய்த்துக் கொண்டிருப்பேன். நல்ல சமயத்தில் வந்து காப்பாற்றினய். கைமாறு கருதாமல் நாம் கொண்ட நட்பை யொரு பொருட்டாக மதித்து, இந்தியாவிலிருந்து இங்கு வந்து என்னைக் காப்பாற்றிய உனக்கு நான் என்ன பிரதிப்பிரயோஜனம் செய்யப்போகின்றேன்?" என்று கூறி ஆனந்தக்கண்ணீர் வடித்தாள்.

மிஸ். சரோஜினியை ஆணென்றே எண்ணியிருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் தானும் அவளைப் பெண்ணென்று அறிந்துகொள்ளமுடியாமற் போனதைப்பற்றி ஆச்சரியங்கொண்

டார். உடனே ஜான்சனை உற்று நோக்கினர். அவன் அவரைப்பார்த்து விழித்தான். "அடே! ஜான்சன்! அடாது செய்பவன் படாதுபடுவான். எப்பொழுதும் சத்தியமும் உண்மையும் தான் ஜெயிக்கும். நீ ஒரு பெண்மணியின் கற்பை அழிக்கமுயன்ருய். ஆனல் அவள் கற்பின் வெற்றியால் நீ அகப்பட்டுக்கொண்டாய்." என்று கூறினர்.

"இன்ஸ்பெக்டரே உமது நீதிமொழிகள் எனக்கு வேண்டாம். போதும்! நிறுத்தும்!" என்று மொழிந்தான் ஜான்சன். இவைகளைக்கேட்ட இன்ஸ்பெக்டர் தாளமாட்டாமல் அவன் கன்னத்தில் இரண்டு மூன்று அடிகள் கொடுத்தார்.

உதைபட்ட ஜான்சன், "வாஸ்தவம்! தாழ்ந்தோர் உயர்வர். உயர்ந்தோர் தாழ்வர்! உண்மை மெய்ப்பித்தது. நான் அரசனின் அந்தரங்கக் காரியதரிசி என்ற அகங்கார மமதையினல் அடாத பல செயல்களைப் புரிந்தேன். அதன் பயனை இப்பொழுது அனுபவசித்தியாக அனுபவிக்கின்றேன். நான் எத்தனையோ மனிதர்களை உதைத்தேன். உதைக்க ஏற்பாடும் செய்தேன். இப்பொழுது நான் உதைபடலாயிற்று. இன்னும் என்னவெல்லாம் நேருமோ அறிகிலேன். இப்பொழுது வருந்துவதால் யாதுபயன்? கண்கெட்ட பின் சூரிய நமஸ்காரம் போலும்!" என்று சிந்தித்து வருந்தினன்.

இந்த நிலையில் சரோஜினி, "ஹேமா! நீ இங்கு வந்த வரலாறென்ன?" என்று கேட்க,

"சரோஜினி! சென்னையில், குபேரக்குடி முனிசிபல் சேர்மன் செட்டியார் மகன் ஜெயசுந்தரன் தலைமையில் பிரசங்கம் செய்ததை நீ அறிவாய். நான் அவர்மேல் காதல்

கொண்டேன். அவரும் இணங்கினர். ஆனல் அவர் மாற்ருந்தாயின் துரெண்ணத்திற் குடன்படாக்காரணத்தினல் துரத்தியடிக்கப்பட்டதால் இருவரும் தோணியிலேறி இந்த தௌலத்தீவிற்குப் பிரயாணமானேம். புயலால் படகு கவிழ நாங்கள் நீரில் மூழ்கினேம். நான் கரை சேர்க்கப்பட்டு இச்சண்டாளனல் சிறைப்படுத்தப்பட்டேன். ஆனல்,— அவர்,— என் காதலர் கதியாதாகிற்ரே அறிகிலேன்'' என்று கூறி கண்ணீர் பெருகினள்.

"ஹேமாவதி! கலங்காதே! உனது காதலன் உயிருடனிருந்தால் நிச்சயம் உன்னை அடையச் செய்கின்றேன்.'' என்று தேருதல் கூறினள் சரோஜினி.

அனைவரும் அங்கிருந்தகன்றனர். மறுநாள் மாலையில் கடற்கறையில் குழுமியிருந்த எழுதப்படிக்கத்தெரிந்த ஒவ்வொரு இந்தியனும் ஒவ்வொரு தினசரிப் பத்திரிகையைப் பிடித்தவண்ணம் சற்று முகமலர்ச்சியுடன் காணப்பட்டனர். ஒருவன், "தெய்வம் ஒன்று போது! மனிதன் நியாயம் தவறினலும் தெய்வம் தவருதன்ரே! அவன் என்னபாடு படுத்தினன்! நம்மை இந்தத் தீவைவிட்டு விரட்டவேண்டுமென்று ஆரம்பித்த பாபி அவன்தானே! தொலைந்தான்! தொலைந்தான்!! இனி நமக்கு வெற்றி உறுதிதான்!'' என்ருன். அங்கு குழுமியிருந்த ஏனையோர் சந்தோஷத்தால் தலையசைத்தனர். இதனை அருகில் நின்று கேட்டிருந்த எழுதப் படிக்கத்தெரியாத இந்தியக்கூலியொருவன், "என்னய்யா சமாச்சாரங்க! நமம தலைமை ஐயாவுங்க காலக்கதிரவரு சங்கதி என்னமாச்சும் பூட்டிருக்கோ!'' எனக்கேட்க, "இல்லை....இல்லை! ஜான்சன் சிறையிலடைக்கப்பட்டான்.'' என்ருன். "அதைக்கொஞ்சம் வாசிச்சுக்காட்டுங்கய்யா!'' என்று கூறிய வண்ணம் அருகிலமர்ந்தான் கூலி.

## ஜான்சனுக்கு சிறைவாசம்.
## இந்தியமாது காப்பாற்றப்பட்டாள்.
## சரோஜினியின் கைமாறு கருதா உதவி.



"அரசரின் அந்தரங்கக் காரியதரிசியான மிஸ்டர் ஜான்சன் இந்திய அணுதையான ஹேமாவதி என்ற ஒரு பெண்ணை துராக்கிருகமாக பலநாள் கள்ளச்சிறையிலிட்டு கற்பழிக்க முயற்சித்ததாகவும், இதனையறிந்த துப்பறியும் நிபுணி மிஸ். சரோஜினி இந்தியாவிலிருந்து இங்கு வந்து போலீஸ் இன்ஸ்பெக்டருடன் சென்று பார்த்தபொழுது மிஸ்டர் ஜான்சன் ஹேமாவதியைப் பலவந்தப்படுத்துவதைக் கண்ணாரக்கண்டு அவனைக் கைதுசெய்து கொண்டுவந்த வழக்கில் நீதிபதி ஜான்சனுக்கு ஆறுவருடக் கடுங்காவல் தண்டனை விதித்துள்ளார்" என்று வாசித்தான்.

இதனைக்கேட்ட கூலி, மனமகிழ்ந்து, "இண்ணைக்கித் தாங்க நமக்கெல்லாம் நல்லகாலம் பொறந்திருக்குதுங்க. இன்னி மேக்கொண்டு, எல்லாம் நன்மைதாங்க" என்று கூறி அகன்றான்.



## எட்டாம் அத்தியாயம்.

தௌலத்தீவு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் எங்கும் ஒரே ஜனத்திரள். மாஜிஸ்ட்ரேட் ஆசனத்திற்கு முன் ஒரு நீண்ட மேஜையும் அதன் இருமருங்கும் நாற்காலிகளுமிருந்தன. சுமார் 11-மணி இருக்கலாம். பல உத்தியோகஸ்தர்களும் வக்கீல்களும் அந்த ஆசனங்களில் வந்தமர்ந்தனர்.

கோர்ட்டின் முன்னிலையில் ஒரு மோட்டார் வண்டி வந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய மாஜிஸ்ட்ரேட் நேராக தனது ஆசனத்திற்குச் சென்றார். அவர் வருகையைக் கண்ட உத்தியோகஸ்தர்களும் வக்கீல்களும் எழுந்து நின்று மரியாதை செலுத்தி தங்கள் தங்கள் ஆசனங்களிலமர்ந்தனர்.

காலக்கதிரவனுக்காக அடிமைகள் நிவாரணச் சங்கத்தாரால் பாலாஜிராவ் எம். ஏ., பி. எல். ம் போலீஸ் தரப்பில் வழக்கை நடத்த பிராசிகியூட்டிங் இன்ஸ்பெக்டர் பொன்னுச்சாமி முதலியாரும் நியமிக்கப்பட்டிருந்தனர். மாஜிஸ்ட்ரேட் ஆசனத்தில் அமரும் பரியந்தம் பாலாஜிராவ் ஏதேதோ பல பல சட்டங்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தார். போலீஸ் இன்ஸ்பெக்டர் அடிக்கடி என்னென்னமோ பிராசிகியூட்டிங் இன்ஸ்பெக்டர் காதில் ஓதிக்கொண்டேயிருந்தார்.

குற்றவாளி எனக்கருதப்பட்டு விலங்கிட்ட கைகளோடு கூடிய காலக்கதிரவன் கைதிக் கூண்டில் நின்றுகொண்டிருந்தான். அவன் முகத்தில் கள்ளங்கபடற்ற களை பிரகாசித்துக்கொண்டிருந்தது. ஆயினும் அவன் சற்று சஞ்சலத்துடன் இருப்பதாகவும் தோன்றியது. கைதிக் கூண்டருகில் பல இந்தியர்கள் குழுமியிருந்தனர். துப்பறியும் மிஸ். சரோஜினியும் கதாநாயகியான ஹேமாவதியும் வந்திருந்தனர்.

ஹேமாவதி அதிகநேரம் கைதியை உற்று நோக்கினள். அவனை எங்கோ பார்த்திருப்பதாக ஞாபகம் வந்தது. ஆனல் திட்டமாக அறியக்கூடவில்லை.

கடிகாரம் 11-மணி அடித்தது. கேஸ் கூப்பிடப்பட்டது. காலக்கதிரவனின் வக்கில் பாலாஜிராவ் எழுந்து மாஜிஸ்ட்ரேட்டுக்கு வணக்கமிட்டு, "காலக்கதிரவனின்

சார்பாக இந்த வழக்கை நடத்த நான் ஆஜராகியிருக்கின்றேன்." என்று கூறி ஒர்மனுவை மாஜிஸ்ட்ரேட் முன் கொடுத்து ஆசனத்திலமர்ந்தார். விசாரணை துவக்கமாயிற்று.

மாஜிஸ்ட்ரேட் காலக்கதிரவனை நோக்கி, "நீ மிஸ். சந்திராவை கொலைசெய்ததாக குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. கொலையை நீ செய்ததுண்டா?" என்று கேட்டார்.

காலக்கதிரவன் :—"கனம் நீதிபதியவர்களே! நான் ஒன்றையும் அறியேன். மிஸ். சந்திரா யாரென்பதையாவது அவள் வாசஸ்தலத்தையாவது தெரியேன். நான் நிரபராதி. அடிமைகள் நிவாரணச் சங்கத்தில் நான் சில காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தபொழுது, மிஸ். சந்திராவை நான் கொலைசெய்ததாகக்கூறி இன்ஸ்பெக்டர் கைது செய்தழைத்து வந்தார். உண்மையில் நான் நிரபராதி" என்றான்.

நீதிபதி :—"உமது பெயர் புதுமாதிரியாகவிருக்கிறதே! இது மாதிரிப் பெயரை இந்தியரிடையில் இது வரையில் கேட்டதில்லையே!!" என்றார்.

காலக்கதிரவன் :—"நீதிபதியாரவர்களே! அதையுமா கேட்கின்றீர்கள்!" என்று கூறிக் கண்ணீர்விட்டான்.

நீதிபதி :— "அப்படி அதிலென்ன விசேஷம்?" எனக் கேட்டார்.

காலக்கதிரவன் :—"நீதிபதியவர்களே! என் உண்மைப் பெயர் ஜெய....சுந்தரன். இந்தத் தீவிற்கு ஒரு வழியாக வந்து சேர்ந்தேன். அடிமைத் தளையை அறுத்தெறிய பிரசாரம் செய்தேன். உதய சூரியன்போல் தோன்றி எம்மக்கள் உள்ளத்தில் உணர்ச்சியைப் புகுத்தியதால்

'காலக்கதிரவன்' என்ற பட்டப்பெயரால் அழைத் தனர்.'' என்று தனது கடந்தகாலச் சம்பவத்தைக் கூறினான். கண்ணீர்விட்டான்.

இவையனைத்தையும் கேட்டு நின்ற ஹேமாவதி, "ஆ! நாதா! தாங்களா? உயிருடனா? உங்களுக்கா இத்துன் பம்! துன்பத்தால் உருவம் கூட மாறிவிட்டதே!'' என்ற வாறு பிரலாபித்தாள். தன் காதலி என்பதை அறிந்த காலக் கதிரவன், "மெய்க்காதலி! அதிர்ஷ்ட வசத்தால் பிரிந்த வர் கூடினோம். இன்னும் சில இடைஞ்சல்கள் நமதிருவர் களிடையே நிற்கின்றன. ஆண்டவனருளால் அவை நீங்கிய பின் இன்புறுவோம்'' என்றான். அங்கு குழுமியிருந்தோ ரனைவரும், இவ்விருவர்களும் காதலனும் காதலியுமென்ப தைத்தெரிந்து மகிழ்வுற்றனேனும், இவர்களைப் பிரித்தி நிற்கும் பொல்லாதவிதியை நினைந்து வருந்தினர். காலக் கதிரவன் மேலும் பேச எண்ணினான். ஆனால் நியாயஸ்தலம் இடங்கொடாக் காரணத்தினால் அமைதி நிலவியது.

இதற்குப்பின் போலீஸ் இலாக்காவின் சார்பாக இன்ஸ் பெக்டர் சாக்ஷிக் கூண்டிலேறி, "சம்பவம் நடந்த காலே யில் நான் ஸ்டேஷனிலிருந்தேன். அப்பொழுது மிஸ். சந் திராவின் வளர்ப்புத்தந்தையான ரத்னாகரம் என்பவர் மேல் மூச்சுக் கீழ்மூச்சு வாங்க அங்கு ஓடி வந்து தனது மகளை அடிமைகள் நிவாரணச் சங்கத்தலைவன் கொலைசெய்துவிட்டு ஓடியதாகக்கூறி என்னை அவசரமாக அழைத்தார். நானும் சில போலீஸ் வீரர்களும் அங்கு சென்று பார்த்ததில் உண் மையாகவே மிஸ். சந்திரா ஒரு துப்பாக்கியால் சுடப்பட்டி ருந்தாள். அருகில் துப்பாக்கி யொன்று கிடந்தது. அதன் லைசென்ஸ் நம்பரைக்கவனித்தேன். 1047-A. என்றிருந் தது. லைசென்ஸ் பதிவுப் புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்த

தில் இவ்வாறுன ஒரு நம்பருள்ள துப்பாக்கிக்கு லைசென்ஸ் கொடுபடவில்லை என்பதை அறிந்தேன். மற்றும் அத்துப் பாக்கியின் கைப்பிடியில் 'கா. க.' என்ற விலாசமிருந்தது. அடிமைகள் நிவாரணச் சங்கத்தலைவன்தான் கொலைசெய்தா னென்று ரத்னுகரம் ஏற்கனவே என்னிடம் கூறியிருந்ததால், அத்தலைவன் பெயரென்னவென்று விசாரித்ததில், 'காலக் கதிரவன்' என்று தெரிந்தேன். 'கால' என்பதில் முத லாவதான 'கா' என்ற எழுத்தும் 'கதிரவன்' என்பதில் முதலாவதான 'க' என்ற எழுத்தும் துப்பாக்கியின் கைப் பிடியிலிருந்ததால் கொலைசெய்தவன் காலக்கதிரவன் என்று தீர்மானித்தேன். நிற்க அவன் அவளை ஏன் கொல்லவேண்டு மென்று யோஜித்துக்கொண்டிருந்தபொழுது அங்கொரு கடிதம் கிடந்தது. அதில் தமிழில் 'டைப்' செய்யப்பட் டிருந்ததால் இன்னுருடைய கையெழுத்தென்றறிய சாதன மில்லாமற்போயிற்று. ஆனுல் கடிதத்தின் சாரத்தையும் துப்பாக்கிச் சம்பவத்தையும் நோக்கியபொழுது அக்கடிதம் காலக்கதிரவனுல் மிஸ். சந்திராவிற்கெழுதப்பட்ட ஒரு லிகிதமென அறியலானேன். அக்கடிதத்தைப் பிராசிகியூட் டிங் இன்ஸ்பெக்டர் இங்கு பதிவுசெய்வார். இந்தச் சாதனங் களையெல்லாம் கொண்டு காலக்கதிரவனைக் கைது செய்து விலங்கிட்டு இதுவரை தக்கபந்தோபஸ்தில் வைத்திருந்தேன். இந்த வழக்கில் இவ்வளவேதான் நான் அறிந்தவை" என் ருர்.

பிராசிகியூட்டிங் இன்ஸ்பெக்டர் எழுந்து "கனம் ஜட்ஜ் அவர்களே! கடிதத்தை வாசிக்கின்றேன் கேளுங்கள்.

அன்புள்ள சந்திரா!

உன்னையடைய ஆசைகொண்டேன். ஆதலின் இன்று

இரவு 9-மணிக்கு அடிமைகள் நிவாரணச்சங்கத்திற்கு வருக.

உன்னை விரும்பும்,

அன்புள்ள,

காலக்கதிரவன்.

கனம் ஜட்ஜ் அவர்களே! இக்கடிதத்தில் கண்டபடி சம்பவம் நடந்த முதல் நாளிரவு மிஸ். சந்திரா அடிமைகள் நிவாரணச்சங்கத்திற்கு செல்லாதிருந்திருப்பாள். அதனுல்கோபங் கொண்ட காலக்கதிரவன் சம்பவம் நடந்த காலையில் அவள் வீட்டிற்கு வந்து பொய்யாக லைசென்ஸ் செய்ததாகப் பாவிக்கப்பட்ட துப்பாக்கியால் அவளைச்சுட்டிருக்கவேண்டும். சுட்ட காரணத்தினுல் பதை பதைத்து துப்பாக்கியைப் போட்டுவிட்டு ஓடியிருக்கவேண்டும். எனவே இக்காரணங் களினுல் காலக்கதிரவனே குற்றவாளியென்றே முடிவு கட்டுகிறேன்" என்று கூறினுர்.

இவையனைத்தையும் கேட்டுக்கொண்டிருந்த நியாயாதிபதி, தாக்கல் செய்யப்பட்ட கடிதத்தைக் காலக்கதிரவனிடம் காண்பித்து, "இது உன்னுல் அனுப்பப்பட்ட கடிதம் தானே?" என்று கேட்டார்.

"அக்கடிதம் என்னுல் அனுப்பப்பட்டதில்லை. அன்றியும் அதைப்பற்றி எனக்கொன்றுமே தெரியாது. யாரோ வீண்பழி சுமத்தும் நோக்கத்துடன் அவ்வாறு செய்திருக்கின்றனர்." என்று பதிலளித்தான் காலக்கதிரவன்.

"நன்று இத்துப்பாக்கி உன்னுடையதல்லவென்று கூறுவாயோ?" என்று 1047-A. நம்பர் துப்பாக்கியை அவன் கையில் கொடுத்துக்கேட்டார் நீதிபதி.

"இல்லை எனக்குத் துப்பாக்கியைப் பிடிக்கக்கூடத் தெரியாது. இந்தியர்களுக்கு ஆத்மபலம் தான் உண்டே தவிர ஆயுதபலம் கிடையாது. அதுவுமிருந்தால் இன்றைய உலகில் இந்தியா பொன்னைபோல் போற்றப்படும். அயல் நாடுகளில் குடியேறிய எம்போன்ற இந்தியர்கள் தங்கள் தாய்நாட்டின் பெருமையால் சீரும் சிறப்புமாய் வாழ்வார்கள். இவ்வாறான அநீதிக்குள் அவதிப்படவேண்டிய அவசியமுமில்லை." என்றான் காலக்கதிரவன்.

"கேட்ட கேள்விக்கு மட்டும் பதில்கூறு. அதிகமாக வார்த்தையை அளக்கவேண்டாம்." என்றார் நீதிபதி.

"கனம் நீதிபதியவர்களே! அவ்வாறு கூறுவதில் தான் எனக்கும் பிரியம். ஆனால் இங்குள்ள இந்தியர்களுக்கு கனம் சர்க்கார் செய்யும் அட்டூழியங்களை நினைத்தால் நெஞ்சம் குமுறுகிறது. அதனாலேயே அதிகம் கூறநேரிடுகிறது. ஏதாவது பாதிக்கும் வண்ணம் அடியேன் கூறியிருந்தால் தயவுசெய்து பொருட்படுத்தவேண்டாமென்று மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்." என்றான் காலக்கதிரவன்.

"உனக்கு யாரேனும் விரோதிகளுண்டா ?" எனக் கேட்டார் நீதிபதி.

"கனம் நீதிபதியவர்களே! தனிப்பட்ட முறையில் யாரும் விரோதிகளில்லை. ஆனால் இங்குள்ள இந்தியர்களுக்கு தீங்குசெய்வோர்களை யெல்லாம் விரோதிகளாகவே கருதுகின்றேன்" என்றான் காலக்கதிரவன்.

இத்துடன் தனது கேள்விகளை நிறுத்திக்கொண்டு வக்கீல் பாலாஜிராவை நோக்கினார் நீதிபதி. பாலாஜிராவின் விருப்பப்படி கொலையுண்டதாகக் கூறப்பட்ட மிஸ். சந்திரா

வின் வளர்ப்புத் தந்தையான ரத்னகாம் குறுக்கு விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டார். ரத்னகாம் சாக்ஷிக் கூண்டிலேறினர். உடம்பெல்லாம் நடுங்கியது.

பாலாஜிராவ்:—ஐயா! இறந்தவள் உங்களுக்கென்ன சொந்தம்.

ரத்னகரம்:—எனது வளர்ப்புப் புதல்வி.

பாலாஜிராவ்:—காலக்கதிரவன் உமது வீட்டிற்கு வந்தாரா?

ரத்னகரம்:—ஆம். வந்தார்.

பாலாஜிராவ்:—என்ன உடை உடுத்தியிருந்தார்?

ரத்னகரம்:—அவர் உடுத்தியிருந்த எல்லா உடைகளையும் கவனிக்கவில்லை. ஆனல் நல்ல பட்டுச்சட்டை போட்டிருந்ததைப்பார்த்தேன்.

பாலாஜிராவ்:—அவன் துப்பாக்கியால் சுட்டதை நேரில் பார்த்தீரா?

ரத்னகரம்:—நேரில் பார்க்கவில்லை. வெடித்த சத்தம் கேட்டது. உடனே கவனித்தேன். காலக்கதிரவன் மிஸ். சந்திராவின் படுக்கையறையிலிருந்து இரைக்க இரைக்க ஓடியதைப்பார்த்தேன்.

பாலாஜிராவ்:—உமது தொழிலென்ன?

ரத்னகரம்:—ஒரு தொழிலுமில்லை.

பாலாஜிராவ்:—அப்படியாயின் ஜீவனம்?

ரத்னகரம்:—மிஸ். சந்திராவின் போஷணையில்.

பாலாஜிராவ்:—அவள் தொழிலென்ன?

ரத்னகரம்:—விப....சா...ரம்.

பாலாஜிராவ்:—நீர் அவளுக்குடந்தைதானே?

ரத்னகரம்:—ஆம்.

பாலாஜிராவ்:—நீர் எப்பொழுதாவது காலக்கதிரவனை உமது வீட்டிற்கழைத்ததுண்டா?

ரத்னுகரம்:—இல்லை.

இத்துடன் ரத்னுகரத்தை விடுத்து போலீஸ் இன்ஸ்பெக்டரை நோக்கி, "ஐயா! தாங்கள் நேரில் சென்று காலக்கதிரவனை கைது செய்ததாகக் கூறினீர்களல்லவா?"

இன்ஸ்பெக்டர்:—ஆம்.

பாலாஜிராவ்:—எப்பொழுது?

இன்ஸ்பெக்டர்:—கொலை நடந்த அன்றே.

பாலாஜிராவ்:—அவன் எவ்வித உடை அணிந்திருந்தான்.

இன்ஸ்பெக்டர்:—கதருடை.

பாலாஜிராவ்:—இப்பொழுது ரத்னுகரம் கூறியது பொய் தானே?

இன்ஸ்பெக்டர்:—எது பொய்?

பாலாஜிராவ்:—காலக்கதிரவன் பட்டுச்சட்டை அணிந்திருந்தானென்று ரத்னுகரம் கூறினுரல்லவா?

இன்ஸ்பெக்டர்:—ஆம்.

பாலாஜிராவ்:—அப்படியாயின் அவர் கூறியது பொய்யல்லவா?

இன்ஸ்பெக்டர்:—அதை நானெப்படிக் கூறமுடியும்?

பாலாஜிராவ்:—ஓடிய பொழுது பட்டுச்சட்டை அணிந்திருந்ததாகக் கூறப்பட்டது. நீர் அதே நேரத்தில் அல்லது மிகச் சிறிய நேரத்தில் அங்கு சென்று பார்த்த பொழுது கதர்ச்சட்டை அணிந்திருந்ததாகத் தெரிவித்தீர். இது உண்மை தானே?

இன்ஸ்பெக்டர்:—ஆம்.

பாலாஜிராவ்:—ரத்னகரம் உண்மையில் வேறு ஒரு பட்டுச் சட்டை யணிந்திருந்த ஆளை தவறுதலாக காலக்கதிரவனென்றெண்ணியிருத்தல் கூடுமோ?

இன்ஸ்பெக்டர்:—ஏன் அவ்வாறு எண்ணவேண்டும்? காலக் கதிரவன் மிஸ். சந்திரா வீட்டிற்குச் சென்றபொழுது பட்டுச்சட்டையை அணிந்திருக்கலாம். திரும்பிவந்தவுடன் பட்டுச்சட்டையைக் கழற்றிவிட்டு கதர்ச்சட்டையை அணிந்திருக்கலாமன்றோ.

இத்துடன் வக்கீல் பாலாஜிராவ் தனது குறுக்கு விசாரணையை முடித்துக்கொண்டு, "கனம் ஜட்ஜ் அவர்களே! நான் அதிகமாகக்கூறி காலத்தைப்போக்க எண்ணவில்லை. சுருக்கமாக எனது அபிப்பிராயத்தைக் கூறிவிடுகிறேன். காலக்கதிரவன் ஒரு உத்தமன். உயர்குடிப்பிறந்தவன். சத்தியத்திற்குக் கட்டுப்பட்டவன். பாஸ்திரீகளைக் கண்ணெடுத்தும் பாராதவன். தேசாபிமானமுள்ளவன். கதரைத் தொட்டகையால் விதேசித்துணியைத் தீண்டவும் மாட்டான். அப்படிப்பட்டவனைப்பட்டுச்சட்டைஅணிந்திருந்தானென்று கூறினால் என்னால் நம்பக்கூடியதல்ல. இன்ஸ்பெக்டர் தான் அடிமைகள் நிவாரணச் சங்கத்திற்குச்சென்று காலக்கதிரவனைக் கண்டபொழுது அவன் கதர்ச்சட்டை அணிந்திருந்ததாகவும் கூறினர். இவைகளிலிருந்து மிஸ். சந்திராவின் வீட்டிற்குச் சென்றவன் ஒரு சாயல் காலக்கதிரவனைப்போன்ற வேறொரு ஆடவனாகத்தானிருக்க வேண்டுமென்பது எனது திடமான நம்பிக்கை. அன்றியும் ரத்னகரம் சொல்லுவதை நம்புவதும் சரியல்ல. ஏனென்றால் அவர் பெண்களின் விலை மதிப்பற்ற ஆபரணமான கற்பைச் சீர்குலைக்க மாப்பிள்ளைகள் பிடிக்கும் மகாப்பாதகர். குறுக்கு விசாரணை நடத்தியபொழுது மிஸ். சந்திராதான் தன்னை போஷிப்ப

தாகக் கூறினர். ஆகவே பண ஆசைப்பட்டு அவளிட முள்ள பணத்தை அபகரிக்கும் பொருட்டு இந்த ரத்னகாமே அவளைக் கொலைசெய்திருப்பினும் இருக்கலாம். ஒருவேளை காலக்கதிரவனல் புரட்சி ஏற்பட்டுக்கொண்டிருந்த காரணத் தினல் அரசாங்கமே அவன்மேல் வீண்பழி சுமத்த முன் வந் திருப்பினும் இருக்கலாம்.

அடுத்ததாக துப்பாக்கியில் "கா. க" என்ற விலாச மிருந்ததால் அது காலக்கதிரவனுடையது தானென்றும் அவன் தான் மிஸ். சந்திராவைக் கொலைசெய்திருக்கவேண்டு மென்றும் நண்பர் பிராசிகியூட்டிங் இன்ஸ்பெக்டர் வெகு வாக விவாதித்தார். கனம் ஜட்ஜ் அவர்களே! காலக்கதிர வன் தனக்கு துப்பாக்கியை உபயோகிக்கத் தெரியாதென்று கூறியதை நீங்களே கூர்ந்து கவனித்திருந்தால் நேரில் அறிந் திருப்பீர்கள். தாங்கள் 1047-A. துப்பாக்கியை காலக்கதிர வனிடம் கொடுத்து, "இத் துப்பாக்கி உன்னுடையதல்ல வென்று கூறுவாயோ?" என்று கேட்டபொழுது, அவன் அத் துப்பாக்கியை கையில் பிடித்த நிலையானது, அதில் குண்டு இருந்தால் உங்கள் முன்னிலையில் அவனையே கொன் றிருத்தல் கூடும். துப்பாக்கியைச் சரியாகவே பிடிக்கத் தெரி யாத ஒருவன் துப்பாக்கியால் சுட்டான் என்று கூறினல் எவ்வாறு பொருந்தும்! ஆதலால் கனம் நீதிபதியவர்களே! காலக்கதிரவன் நிரபராதி யென்றும், உண்மைக் குற்றவாளி வேருெருவனென்றும், உளவுகள் ரத்னகாத்திற்குத் தெரியா மலிராதென்றும் புலனுகின்றது" என்று கூறினர்.

நியாயாதிபதி வக்கில்களை நோக்கி, "குற்றவாளியின் வாக்குமூலமும் கேட்டாய் விட்டது. சாக்ஷிகளையும் விசா ரணை செய்தாய்விட்டது. இருதரப்பாரின் விவாதங்களையும்

உணர்ந்தோம். இப்பொழுது கோர்ட்டுக்கலையும் நேரத்திற்கு மேலாகிவிட்டது. நாளை முதல் ஒருவாரம் அரசாங்க விடு முறை குறுக்கிட்டு நிற்கிறது. ஆகவே அடுத்தவாரம் வழக்கின் முடிவைக்கூறுவோம்.'' என்று கூறி தனது ஆசனத்தினின்றும் எழுந்தபொழுது,

துப்பறியும் மிஸ். சரோஜினி குறுக்கிட்டு, "கனம் ஜட்ஜ் அவர்களே! நான் துப்பறிபவள் என்ற முறையில் இந்த வழக்கில் சில உண்மைகளை அறியப்போகின்றேன். அதற்கு சாதகமாக 1047-A. துப்பாக்கியை நான் சற்று கவனிக்க விரும்புகிறேன். மற்றும் இந்த வழக்கில் தாக்கல் செய்யப்பட்ட கடிதத்தை ஒருவாரம் வரை என்னிடம் கொடுத்து வைக்கும்படியாகக் கோருகிறேன்'' என்று கேட்க, அவ வாறே அனுமதி அளிக்கப்பட்டது. சரோஜினி துப்பாக்கியை பலபடி கவனித்து, பின் அதைக்கொடுத்துவிட்டு கடிதத்தை மட்டும் எடுத்துக்கொண்டாள். நீதிபதி ஆசனத்திலிருந்தெழுந்து தனி அறைக்குள் சென்றுவிட்டார். அங்கு குழுமியிருந்த மக்களெல்லோரும் தங்கள் தங்கள் மனப்போக்கின்படி அபிப்பிராயங் கூறிக்கொண்டகன்றனர்.

காலக்கதிரவன் ஹேமாவதியை நோக்கினான். அவளும் அவனை நோக்கினாள். ஆயினும் என் செய்வது? நீதிஸ்தலமன்றோ! எனவே, அங்கிருந்து அகலமனமற்று ஹேமாவதி மிஸ். சரோஜினியோடு உடன் சென்றாள்.



## ஒன்பதாம் அத்தியாயம்.

சிங்கப்பூரில் மார்க்கெட் தெருவில் ஒரு செட்டியார் கடை. இரவு ஒன்பது மணியிருக்கலாம். மேஜைமேல் குறிப்பு, பேரேடு புஸ்தகங்களிருந்தன. அவைகளின் முன்னிலை

யில் சுமார் ஐம்பது வயதுள்ள செட்டியாரொருவர் உட்கார்ந்த வண்ணம் மூக்கின்மேல் விரலைவைத்து ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தார். அவரருகில் ஒரு கணக்குப்பிள்ளை ஏதோ கணக்குப் பார்த்துக்கொண்டிருந்தார்.

மற்றொரு செட்டியார் அங்கு வந்தார். வந்த செட்டியார், இருந்த செட்டியாரை நோக்கி, "நேற்று கைமாற்றாக வாங்கிவந்த ரூபாய் ஐயாயிரத்தையும் கொடுங்கள்" என்று கேட்டார். யோஜனையிலிருந்த செட்டியார் நிமிர்ந்து, "வாருங்கள்! அடடா! இதற்கு தாங்கள் தானுவரவேண்டும்! ஒரு பொடியனை அனுப்பினால் போதாதா? அது கிடக்கட்டும். 'காப்பி' சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்டார்.

வந்த செட்டியார் சற்று அவசரமாக, "இல்லை! 'காப்பி' வேண்டாம். சாப்பிடும் நேரமல்லவோ! நான் போக வேண்டும். ரூபாயைக் கொடுங்கள்" என்று கேட்டார்.

"இது....கொஞ்சம் முன்பு.........அந்த.......தி. ச. க. இருந்ததை...கைமாத்தாக....வாங்கிக்கொண்டு போனார்கள். நாளை....மாலையில்.... தருவார்கள். வந்ததும்........ அனுப்புகிறேன்" என்று சற்று இழுத்திழுத்துச் சொன்னார். வந்த செட்டியார் சற்று கோபங்கொண்டார். என்றாலும் ஒரு வாறாக, "சரி! கட்டாயம் நாளைப்பணம் வேண்டும். தவற வேண்டாம்." என்று கூறி அகன்றார்.

மீண்டும் பழைய செட்டியார் யோஜனையில் புகுந்தார். அப்பொழுது ஒரு ஷேட் அங்குவந்து, "செட்டியாரே! என்ன நமக்கு ரொம்ப கஷ்டம் கொடுத்திங்க? ஒங்கட செக் நம்பள்கி, பாஸ் ஆக்மாட்டான் போறான்." என்ற வண்ணம் ஒரு செக் காகிதத்தை அவர்மேல் கோபமாக வீசியெறிந்தான். அதைக் கையிலெடுத்த செட்டியார், அவனை

நோக்கி, "உனக்கு முன்னல் ஒருவன் அவனுக்குக்கொடுத்திருந்த செக்கைப்போட்டு பணமாக்கிவிட்டான்போலும். நீ பிந்திவிட்டாய். போகட்டும் பாங்கில் நாளை மறுபடியும் கொடுத்து பணமாக்கிக்கொள். அதற்குள் நான் ஆகவேண்டியதைச் செய்துவிடுகிறேன்" என்று சொல்லி அவனையும் அனுப்பினர்.

மறுபடியும் யோஜனை செய்ய ஆரம்பித்தார். அப்பொழுது காபி ஓட்டல்காரன் ஒருவன் அங்கு வந்தான். "முதலாளி! இந்த மாதத்தோடு தாங்கள் தரவேண்டிய பாக்கி நூற்றைம்பது வெள்ளியாகிறது. இப்பொழுது பணம் மிகவும் முடையாகவிருக்கிறது. தருகிறீர்களா?" என்று கேட்டான். முதலாளி கணக்குப் பிள்ளையை நோக்கினர். கணக்குப்பிள்ளை பொக்கப்பெட்டியை நோக்கியபின், அவனை நோக்கி, "இன்று பணமில்லை. நாளைவா!" என்று கூறி அனுப்பினர்.

இவையனைத்தும் முதலாளிச் செட்டியாரின் மனதைப் புண்படுத்தின. "என்ன கேவலம்? இனிக் கடைத்தேற மார்க்கமில்லை. கடை கவிழ்ந்துவிட்டது. இப்பொழுதே சமாளிக்கமுடியவில்லை. நமக்கு வரவேண்டிய தொகை அதிகமாகவிருக்கிறது. ஆனல் என் செய்வது? இட்ட கடன் பட்ட கடனுக்காகுமா? நம்மிடம் கொடுத்துவைத்தோர் சாவதானமாயிருப்பார்களேயானல் சகலமும் ஒழுங்காகும். ஆனல் அதை எவ்வாறு எதிர் பார்க்கமுடியும்? கஷ்டகாலம்." என்று தனக்குள் முடிவுசெய்துகொண்டு கணக்குப்பிள்ளையிடம் ரகசியமாக எதோ கூறிவிட்டு வெளிக்கிளம்பினர்.

இவ்வாறு புறப்பட்ட செட்டியார்தான் நமது கதாநாயகனின் தந்தையான குபேரக்குடி முனிசிபல் சேர்மன்

செட்டியார். இவ்வாருக வறுமையால் நொந்த செட்டியார் சின்னுட்களில் குபேரக்குடியை வந்தடைந்தார். அவ்வாறு அவர் வந்தபொழுது நள்ளிரவு பனிரண்டுமணியிருக்கலாம். தாளிடப்பட்டிருந்த தம்மனைக் கதவைத்தட்டப்போனுர். அவ் வமயம் யாரோ இருவர் வீட்டினுள் சம்பாஷிக்கும் சத்தம் கேட்க, வந்த நிலையிலேயே நின்று அறியலானுர்.

ஒரு குரல் தனக்கு பரிச்சயமானதாகவும் பெண் தொனியாகவும் தெரிந்தது. மேலும் கவனித்ததில் அது தனது மனைவியின் குரலென அறிந்தார். மற்ருெரு குரலை இன்னுருடையதென்று திட்டமாக அறியக்கூடவில்லை. என்றுலும் அவ்விருவர்களும் நிகழ்த்திய சம்பாஷணையிலிருந்து அது ஒரு ஆடவனுடைய குரலாகத் தானிருக்கவேண்டுமென்று யூகித்த வண்ணம் மேலும் ஒற்றுக்கேட்டார். அப்பொழுது அவர் மனைவி,

"நான் என் கணவனை நிராகரித்து,—அவருக்கு,—கொண்ட கணவருக்கு இரண்டகம் செய்து நீங்களே சகலமு மென்றெண்ணி என்னை உங்கள் வசம் ஒப்படைத்துவிட்டேன். ஆதலின் தாங்கள் எவ்வித ஆபத்து நேர்ந்தபொழுதும் என்னைக் கைவிடலாகாது. ஆசை அறுபதுநாள் மோகம் முப்பதுநாள் என்று கூறுவார்கள். அவ்வாருகி விடக் கூடாது" என்ருள்.

"கண்ணே! எல்லோரையும் போல் என்னையும் நினைத்து விடாதே! என்னை முற்றும் நம்பு. உயிர்போவதாயினும்சரி,—உன்னைக் கைவிடமாட்டேன். இது சத்தியமான வார்த்தை" என்ருன் ஆடவன்.

"காதலா! மெத்த சந்தோஷம்! எனது உருவுக்கும் திருவுக்கும் ஏற்ற உங்களுடன் அனுபவிப்பதன்ருே சுகம்! அதை

விட்டு விட்டு கிழட்டுப் பிணத்தைக் கட்டிக்கொண்டார் மாபா டிப்பது! சனியன். நல்லவேளையில் சிங்கப்பூருக்குத் தொலேந் தது. வாராவழியும் திரும்பாப்பயணமுமாக கடவுள் அருள் சுரக்கட்டும்.'' என்றாள்.

“ஆசைக்கனியே! அவரை வீணில் நிந்தனை செய்யாதே! அவரில்லாவிட்டால் நாம் எவ்வாறு காதலுறவாடமுடியும்'' என்றான்.

இவையனைத்தையும் மிகப் பொருமையுடன் கேட்டு நின்ற செட்டியார் சற்று ஆழ்ந்து யோஜித்தார். “ஆம்!.... ஆம்!! வாஸ்தவம்!!!'' என்று தன்னுள் கூறி வருத்தமுற்றார். பின் சற்று தேறி தன் மதியற்ற தன்மையை நினைந்து, “நான் ஏன் வருந்தவேண்டும்? எய்தவரிருக்க அம்பை நோவ தில் யாதுபயன்? பல்லும் சொல்லும் போய், காடு வா வூ, வீடு போ போ என்ற நிலையிலுள்ள என்போன்ற தொண்டு கிழங்கள் சின்னஞ் சிறு பெண்களை மணக்க முற்பட்டு அவ் வழி நிற்றலாலல்லவோ இன்னன நேருகின்றன! ஏழைச் சிறுமியைக் குறை கூறுவதில் என்ன பிரயோஜனம்?'' என்று தேறுதல் கொண்டு கதவைத் தட்டினார்.

உள்ளிருந்த கள்ளக்காதலரிருவரும் திகைப்புக்கொண் டனர். அந்நேரத்தில் அவ்வளவு தைரியத்துடன் கதவைத் தட்டவல்லார் யாராயிருத்தல் கூடுமென்றெண்ணினர். ஆனால் ஒன்றும் விளங்கவில்லை. எனவே அம்மாது கள்ளக்காதலனை கட்டிலின் கீழ் மறைத்து வைத்து பின்னர் கதவைத் திறந் தாள். எதிர்பாராத விதத்தில் தனது நாயகர் வரவைக் கண்ட அப்பெண் திடுக்கிட்டாள். சாந்தங்கொண்டிருந்த செட்டியா ருக்கு தன்னையறியாமலேயே கோபம் பொங்கியெழ பல்லை நற நற வென்று கடித்தார். கண்களில் கோபாக்கினி வீசி யது. தேகம் பதறியது. அவளின் சிகையைப் பிடித்து,

"அடி சண்டாளி! என்னகாரியம் செய்யத் துணிந்தாய்? கொண்ட புருஷனை வஞ்சித்த பாதகி! நீ மகா கிராதகி! உன் முகத்திலும் விழிக்கலாகாது. உன்னால் என் அருமந்த மகன் ஜெயசுந்தரனையும் இழந்தேன்! ஆ! மைந்தா! என்று அலறி அழுதார். பின்பு ஒருவாறு தேறி, "அடி நாயே! எங்கே உன் கள்ளக்காதலன்?" எனக்கேட்டார்.

அப்பெண்மணி பதில் சொல்லும் வகையற்றுத் திகைத்தாள். பின்னர், "நாதா! என்னை மன்னியுங்கள்! அது எனது குற்றமல்ல! எனக்கு ஒரு வழியிலும் ஒவ்வாத வயதில் பெரிய தங்களை என் பெற்றோர்கள் பணப்பேய் வசப்பட்டு மணம் முடித்து விட்டனர். அதற்கு நானென் செய்வேன்? ஆதலால் என் மனதிற்குகந்த ஒருவருடன் மகிழ எண்ணினேன். குற்றம் எனதல்ல. கிழவயதில் தாங்கள் இளஞ்சிறுமி என்னை மணந்ததால் நேர்ந்த தொல்லை." என்றாள்.

இதனைக்கேட்ட சேர்மன் செட்டியார், "ஆம்! ஆம்!! எனது குற்றம்! உணர்ந்தேன்! என் செய்வேன்? முதல் மனைவியைப் பிரிந்தேன்! அருமை மகனைத் துறந்தேன்! செல்வமிழந்தேன்! மறு மனைவி கற்பற்றவள் என்ற அபவாதத்திற்காளானேன்! அந்தோ! சிறப்புடன் வாழ்ந்த ஒருவனுக்கு நேரும் அபகீர்த்தியுடனும் பழிச்சொல்லுடனும் இல்லறம் நடாத்துவதினும் துறவறம் மேல்! ஏ பெண்ணே! இனி என்னை ஸ்வப்பனத்திலும் நினைக்கவேண்டாம். நான் உன்னை கிழவயதில் மறுமணம் புரிந்து கொண்டதும், அதிலிருந்து இந்நாள் வரை நிகழ்ந்தனவும், இப்பொழுது நான் துறவியாவதும் இந்தப்பாழும் சமூகத்திற்கு ஒரு உதாரணமாகட்டும். உன் இஷ்டம்போல் நட!" என்று கூறி அவளைத் திரும்பியும் பாராமல் அந்நள்ளிருளிலேயே தன் கால்களின் போக்கின்படி நடந்தார்.

இது இவ்வாறாக, ஹேமாவதியின் தாய் மோஹனும் பாளைச் சற்று கவனிப்போம். குபேரக்குடியில் தனது தொழிலை நடத்தமுடியாமற்போன காரணத்தால் பலவித மான யோஜனை செய்து வேற்றூருக்குப் பயணமானுள். அங் கும் சட்டதிட்டங்கள் அவளை வெருட்டியதைக்கண்டு செய் யும் உபாயம் தோன்றாது திகைத்தாள்.

தனது அருமை மகளாகிய நமது கதாநாயகியின் பிரி வைப்பற்றியும், அவள் மனம் நோக தான் நடந்ததை நினைந் தும் மெழுகாய் உருகினுள். புத்திரியின் பிரிவை சகிக்கமுடி யாமல் தத்தளித்தாள். "அடி என் அருமைக் கண்மணி! நீ எங்கிருக்கின்றாய்? உன்னை மீண்டும் காணும் பாக்கியம் கிட்டுமோ? அந்தோ! அடி மகளே! என்னை மன்னித்துவிடு! நான் பாபி! நீ புண்ணியவதி! இச் சண்டாளிவயிற்றிலா அருங்குணமணியான நீ பிறக்கவேண்டும்! கள்ளிவயிற்றில் அகில் பிறந்தாற்போல் விபசாரியாகிய என் வயிற்றில் மகா கற்புக்கரசியாகிய நீ உதித்தாய்! உன்னை உயிருடன் இந்த ஜன்மத்தில் காணுவனே! கண்டால் என்னை வெறுக்காது ஏற்பாயோ! ஏதும் அறிகிலேனே! அந்தோ! அந்தோ! விதி! தலைவிதி! கண்மணி! நீ உயிருடனிருந்தால் உனக்கு உண்ண உணவு கிடைத்ததோ? உடுக்க உடை கிடைத்ததோ? நிற்க நிழல் கிடைத்ததோ? வெயிலில் நலிந்தாயோ? மழையில் நனைந்தாயோ? என்ன நினைந்தாயோ? ஒன்றும் அறிகி லேனே!" என்று வாய்விட்டழுதாள்.

இவளின் நிலை இவ்வாறாக, பல மாதங்கள் கடந்தன. வருஷங்கள் பலவும் கழிந்தன. அவள் கையில் காசுமில்லை. கடன் கொடுப்பார் யாருமில்லை. தொழிலை மேற்கொள்ளவோ சட்டமில்லை. இப்பொழுது ஞானம் உதயமானுற்போல்,

"சிச்சீ! நாழி அரிசிச் சோற்றால் இந்த நாற்றக் குடலை நிரப்பவும், நான்கு முழக் கந்தையால் நாறும் உடலை மறைக்கவும் தகாத காரியத்தைச் செய்தேன். எத்தனையோ உத்தமர்களைக் கெடுத்தழித்தேன். என் வயிற்றிலுதித்த பல சிசுக்களை பிறவாமுன்னரே கொலை செய்தேன். நான் மகாப்பெரிய பாவி! கற்பிழந்த காதகி! மானமிழந்த சண்டாளி! என் இன்னும் உயிர்வாழவேண்டும்? மானங்கெட்டபின் வாழ்தல் ஒரு பெரிதா! எனது இக் கேவல நிலைக்குக் காரணம் இச்சண்டாளியின் அழகல்லவோ! ஆம்! மஞ்சள் முகமினுக்கு! மற்ற எழில் மினுக்கு! விழிக்கொரு சிமிட்டு! வெளிக்கொரு பகட்டு! இவைகளே என்னைக் கெடுத்தன. தற்கொலை செய்து கொள்ளலாம். ஆனால் அது பாபம். கற்பிழந்த கொடுமையுடன் தற்கொலையின் இழிவையுமா சேர்த்துக்கொள்வது? ஆனால் வேறு வழிதானென்ன?'' என்று சிந்தித்தாள்.

சிறிது நேரத்தில் ஒருவித முடிவிற்கு வந்தவளாய் வெள்ளுடை தரித்து சிகையைக் குலைத்து தேச சஞ்சாரம் செய்யப் புறப்பட்டாள்.



## பத்தாம் அத்தியாயம்.

தௌலத்தீவு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஏக கூட்டம். காலை சரியாக பதினொரு மணிக்கு மாஜிஸ்ட்ரேட் தனது ஆசனத்தில் வந்தமர்ந்தார். அங்கு கூடியிருந்த வக்கீல்களும் இதர உத்தியோகஸ்தர்களும் எழுந்து மரியாதை செய்தமர்ந்தனர். காலக்கதிரவனும் கைதிக்கூண்டில் நிறுத்தப்பட்டான்.

மாஜிஸ்ட்ரேட் ஒரு காகிதக் கட்டையவிழ்த்து அதிலி ருந்த ஒரு எழுதிய காகிதத்தை எடுத்து,

"காலக்கதிரவனுக்காக வழக்காடிய மிஸ்டர் பாலாஜி ராவ் காலக்கதிரவன் ஓர் உத்தமனென்றும், சத்தியசீலனென் றும், பரஸ்திரீகளைக் கண்ணெடுத்தும் பார்க்கத்துணியாத உள்ளமுள்ளவனென்றும், தீவிர கதராபிமானியென்றும், ஆதலால் அவன் சில்க்சட்டை அணிந்திருந்ததாகக் கூறப் பட்டது முழுப்புரட்டென்றும், அன்றியும் இன்ஸ்பெக்டர் மிகச்சடுதியில் கவனித்தபொழுது பூராவும் கதரணிந்திருந்த தாகக் கூறியதுதான் மெய்யென்றும், ஆதலால் வேறு எவனோதான் மிஸ். சந்திரா வீட்டிற்கு வந்திருக்கவேண்டு மென்றும், ரத்னகாம் எதையும் சொல்லத்தயங்காத சுபா வத்தை உண்டுபண்ணும் கேவலத்தொழிலுக்கு அடிகோலி யாதலால் அவர் சாக்ஷியம் மிகப் புரட்டென்றும், பண ஆசை கொண்டு அவரே மிஸ். சந்திராவைக் கொன்றிருத்தல் கூடுமென்றும், அல்லது காலக்கதிரவன் அடிமைகளுக்கு உணர்ச்சியை யூட்டியதால் விரோதிகள் வீண்பழி சுமத்தி யிருத்தல் கூடுமென்றும், துப்பாக்கி விஷயத்தில் கைதிக்கு அதனை உபயோகப்படுத்தக்கூடத் தெரியாதென்றும், ஆத லால் காலக்கதிரவன் நிரபராதி யென்றும் வெகுவாக விவா தித்தார்.

ஆனால் பிராசிகியூட்டிங் இன்ஸ்பெக்டர் தாக்கல் செய்த கடிதத்திலிருந்தும், துப்பாக்கி விஷயத்திலிருந்தும், இன்ஸ் பெக்டருடைய சாக்ஷியத்திலிருந்தும், ரத்னகாருடைய வாக்குமூலத்திலிருந்தும், காலக்கதிரவன்தான்...." என்று மேலும் வாசிக்கப்போகும் தறுவாயில்,

கைதிக் கூண்டில் நிறுத்தப்பட்டிருந்த காலக்கதிரவன் தனக்கு தண்டனை கிடைப்பது நிச்சயமென நினைந்து, "வ

ஈசா! சந்தோஷம்! இனி நான் இம் மண்மிசை வாழவேண்டி லேன்! எனது துன்பவாழ்வு போதும்! அந்தமில்லாத்துய ரை அனுபவிக்க வேண்டிலேன்! ஏ, கருணாநிதே! என் மனதை ஏன் துன்பத்திலாழ்த்துகின்றாய்? நான் செய்த தீவினை என்ன? நியாயம் வழங்குதல் உனக்கொரு பொருட்டோ? சிச்சி! நீ கருணாநிதியல்ல! ஆபத்பாந்தவனல்ல! அனாதரக்ஷக னல்ல! ஏழைபங்காளனல்ல! எளியோர் விஸ்வாசனல்ல! நீ சண்டாளன்! நீ காதகன்! நீ கொடியன்! நீ உண்மை உணராதவன்! நீதி தெரியாதவன்! நெறிவழி நில்லாதவன்! அறத்தைக் கொன்று மறத்தை வளர்ப்பவன்! கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்ற வாக்கியம் என் விஷயத்தில் பொய்த்ததுபோலும்! இனி உன்னை, ஏ கடவுளே! நீ இன்று என்னை ஆதரித்து நிரபராதியென்று நிரூபிக்காவிட்டாலும், மற்றொரு நாளிலாவது எனது மாசற்றதன்மை வெளியாகாமற் போகாது. இப்பொழுது நீ ஆதரிக்க முன்வராவிட்டாலும் என்னை மரணம் ஆதரிக்க முன்வந்திருக்கிறது! என்றாலும் அதற்காக நான் வருந்தவில்லை! ஆனால் ஹேமாவதியை நினைந்தழுகின்றேன்! இல்லை; நான் நினைந்த காரியத்தை,—அடிமைகளுக்கு வெற்றிகிடைக்குமுன்பு இறக்கப்போவதை நினைந்து தான் வருந்துகின்றேன்! ஆயினுமென்ன? அடிமைகள் வெற்றிக்கு நான் விதைத்த வித்துக்கள் விளையாமற் போகா! அது நிச்சயம்! நிச்சயம்!!

ஆதலின் எனக்கு மரணதண்டனை விதிப்பதாயின், ஏ மரணமே! இதோ உன்னை வழிபடுகின்றேன். ஆட்கொள். நீ செய்யப்போகும் உதவியைப் பேருதவியாகக் கொள்கின்றேன். இந்த இன்பமில்லா துன்பவாழ்வினின்றும் என்னை ஏற்றுக்கொள். ஆம்! ஆம்!! உணருகின்றேன்,—கஷ்டகாலத்

தில் கடவுளை நிந்திப்பது பேதமை! இதோ உன் மைந்தன் கைதிக்கூண்டில் கைவிலங்குகளுடன் நிற்கின்றேன். ஏ ஆபத் மூர்த்தியே! உன்னை நான் வெறுத்துத் தூற்றியது தவறு! நீ இவ்வுலகில் துன்பம் நீக்கி இன்பமன்றோ கொடுக்கின்றாய்! உன்னால் சிறை நீங்குகின்றது! சிரமம் கெடுகின்றது! அவமானம் அகல்கின்றது! ஆதலின் கைவிடவேண்டாம்!" என்றவாறு நெருப்பில் வீழ்ந்த மெழுகுபோலுருகிக் கரைந்து மூர்ச்சித்து அக் கூண்டிலேயே சாய்ந்தான்.

அச்சமயத்தில், "நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!! காலக் கதிரவன் நிரபராதி" என்று கூறியவண்ணம் கூட்டத்தை இடித்துத் தள்ளிக்கொண்டு நியாயாதிபதியின் முன் தோன்றினாள் மிஸ். சரோஜினி. இவைகள் காலக்கதிரவனின் செவிகளில் விழவே விழித்தான். முன்பின் அறியாத ஒரு பெண் தனக்காக முன்வந்ததை நினைந்து சந்தோஷமடைந்தான்.

இதுவரையும் காலக்கதிரவனுக்குக் கடுந்தண்டனை விதிக்கப்படுமென்றெண்ணி ஏங்கியிருந்த இந்தியர்களுள்ளங்கள் மகிழ்ந்தன. வருந்திக்கொண்டிருந்த ஹேமாவதியும் திடங்கொண்டாள். எதிர்பாரா நிலையில் அங்கு தனது கக்ஷிக்கு பலமாய் வந்த மிஸ். சரோஜினிக்கு வரவுகூறி, தனதருகில் ஆசனங்கொடுத்தமரச்செய்தார் வக்கீல் பாலாஜிராவ். பிராசிகியூட்டிங் இன்ஸ்பெக்டர் தனது கக்ஷி ஒருவேளை தோல்வியடையுமோ வென்றெண்ணினர்.

மிஸ். சரோஜினியை நோக்கிய நியாயாதிபதி, "பெண்ணே! திட்டமாக காலக்கதிரவன் நிரபராதி என்று கூறத்தக்க ஆதாரங்களிருக்கின்றனவா?" என்று கேட்டார்.

"ஆதாரவில்லாமலா அவ்வாறு கூறுவேன்?" என்று பதிலளித்தாள் மிஸ். சரோஜினி.

இதனைக்கேட்ட நீதிபதி, "அப்படியாயின் உண்மைக் குற்றவாளி யார்?" எனக் கேட்டார்.

"கனம் நீதிபதியவர்களே! அதை வெளிப்படுத்துமுன் காலக்கதிரவன் நிரபராதி என்பதை விளக்கினுல் மற்றெல்லாம் தானுகவே விளங்கும். ஆனுல் ஒன்று கூற விரும்புகிறேன். தற்கால நீதிஸ்தலங்களில் நியாயம் வழங்கப்படுவதில்லை. குற்றமொருவர் புரிய மற்றவர் வாட்டப்படுகின்றனர். இந்த அநீதியைச் சகிப்பதெங்ஙனம்? நான் இந்தச் சமயத்தில் இங்கு வராவிட்டால், 'காலக்கதிரவன்தான் குற்றவாளி' என்று தீர்ப்புக்கூறி மரணதண்டனையும் விதித்திருப்பீர்களல்லவோ? அப்படி நிகழ்ந்திருந்தால் அவனின் பிரிவிற்காக அவன் மனைவியும், அவளின் சினேகிதியாகிய நானும் என்போன்றுரும், பொதுவாக இந்த தௌலத்தீவில் வாழும் இந்தியர்களும் வருந்தி மாய்வோமன்றோ! ஏதோ அந்த ஹேமாவதியின் கற்பின் பலத்தால் தக்க சமயத்தில் ஆண்டவன் என்னை இங்கனுப்புவித்தார்" என்று மேலும் கூற முனைந்தபொழுது,

"மிஸ். சரோஜினி! அதனைச் சிந்திப்பதில் இப்பொழுது ஆவதொன்றுமில்லை. ஆதலால் காலக்கதிரவன் நிரபராதி என்று நீ கூறவந்ததிற்குள்ள சான்றுகள் யாவை?" என்றார் நியாயாதிபதி.

"கனம் ஜட்ஜ் அவர்களே! இந்த இடத்திலிருந்து, காலக்கதிரவனின் வழக்குசம்பந்தமாக தாக்கல் செய்யப்பட்டிருந்தகடிதத்தைப்பெற்ற நான், கடந்த சிலநாட்களாகஇராப்பகல் கஷ்டப்பட்டு, தெய்வாதீனமாக உண்மை அறியப்பெற்றேன். எவ்விதமெனில், குறிப்பிட்ட கடிதத்தின்மூலம் ஏதாவது புலன் கிடைக்குமா வென்று பார்த்ததில் ஒன்றும்

அதிகமாகத் தோற்றவில்லை. அக் கடிதத்தின் நீரெழுத்துக் களைக் கவனித்தபொழுது, அதில், 'இந்தியாவில் செய்யப்பட் டது' (Made in India) என்ற எழுத்துக்களும், மகான் காந்தியின் உருவமும் போடப்பட்டிருந்தது. யோஜனை பலப் பட்டது. இந்தியர்களிடம் துவேஷமுள்ள இந்த தௌலத் தீவில் இந்தியக் காகிதங்களை விற்பனைசெய்வோர் யாரெனச் சிந்தித்தேன். சிந்திக்கும் வேளையில், அவ்வாருன இந்தியச் சாமான்களை விற்பனை செய்யும் கம்பெனி ஒன்றிருப்பது தெரிந்தது. எனவே, அங்கு சென்று, கம்பெனியின் சொந் தக்காரரான ஒரு இந்தியக் கனவானிடம், காலக்கதிரவனைப் பற்றிய பரிதாப நிலையைக் கூறி, எனது எண்ணத்தையும் பெரும் முயற்சியையும் எடுத்துக் காட்டி, குறிப்பிட்ட காகி தத்தை அவரிடம் கொடுத்து, எல்லாவிதத்திலும் அது போன்ற காகிதம் யார்யாருக்கு விற்பனை செய்யப்பட்டிருக் கிறதென்று கேட்டேன். அக்கனவானும் இந்தியரென்ற ஹோதாவில் காலக்கதிரவனிடம் பரிவுகொண்டு பழயகணக்கு களைப் புரட்டிப்பார்த்தார். பின்பு, அதுபோன்ற காகிதம் அண்மையில் இந்தியாவிலிருந்து வந்ததென்றும், இத்தீவின் மன்னருடைய அந்தரங்கக்காரியதரிசியான மிஸ்டர் ஜான்ச னுக்குமட்டும்தான் விற்பனை செய்யப்பட்டிருப்பதாகவும் சொன்னர். அப்பொழுதுதான் விஷயம் சற்று விளக்கமாகி யது. அதாவது ஜான்சன் இந்தியர்களை அத் தீவினின்றும் விரட்டக் கங்கணங் கட்டிக்கொண்டிருப்பதை எற்கனவே அறிந்திருந்த நான், அவனை அடிமைகளுக்கு விடுதலையளிக்க முன் வந்த காலக்கதிரவன் மேல் வீண்பழி சுமத்தியிருப்பா னென்றெண்ணினேன். காலக்கதிரவன் சுதேசிப்பொருள் களை ஆதரிப்பவனென்ற காரணத்தால், அவன்மேல் சந்தே கத்தைப் பலப்படுத்தும் நோக்கத்தால் இந்தியாவில் செய்யப்

பட்ட காகிதத்தை ஜான்சன் உபயோகித்திருப்பானென முடிவு கொண்டேன்.

ஒருவாறு ஜான்சன் பேரில் முழுச்சந்தேகங்கொண்ட நான் நேராக ஸ்டேஷனுக்குச் சென்று துப்பாக்கிகள் லைசென்ஸ் நம்பர்கள் பதிவுசெய்யப்பட்டிருந்த புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தேன். அதில் ஜான்சனுடைய பெயரையும் கண்டேன். இப்பொழுது எனது சந்தேகம் முற்றியது. அவருடைய துப்பாக்கியின் லைசன்ஸ் நம்பர் என்னவென்று கவனித்தேன். 1041 A. என்றிருந்தது. ஆனால் இங்கு காட்டப்பட்ட துப்பாக்கியின் நம்பர் 1047 A. எனவே வித்தியாசத்திற்குள்ள விளக்கத்தைப்பற்றி யோஜித்தபொழுது A. க்கு முன்னுள்ள 'ஒன்று' என்ற இலக்கத்தை மேலே இழுத்து சுலபத்தில் 'ஏழு' என்று ஆக்கியிருப்பானென்று திடங்கொண்டேன்.

கனம் ஜட்ஜ் அவர்களே! துப்பாக்கியைப் பாருங்கள்!" என்றாள். அவரும் கவனித்து அதனை ஆமோதிப்பவர் போல் சரோஜினியை நோக்கினர். சரோஜினி மீண்டும், "நீதிபதியவர்களே! இந்த வழக்கில் காலக்கதிரவன் நிரபராதியென்றும், ஜான்சன்தான் குற்றவாளி என்றும் தெற்றெனப் புலனாகின்றது. நிற்க, இன்னும் திடத்திற்குமேல் திடமாக அறிய எண்ணினால் ஹேமாவதியைக் கற்பழிக்க முனைந்த காரணத்திற்காக இப்பொழுது சிறையிலிருக்கும் ஜான்சனைக் கடுமையாய் விசாரணை செய்தால் தெரியும். அன்றியும் அதற்கு முன், கொலையுண்ட மிஸ். சந்திராவின் தொழிலுக்கு அனுகுணமாயிருந்த ரத்னாகரத்தை விசாரித்தால் உண்மை புலனாகும். ஆனால் அவனைவிசாரிக்கும்பொழுது, மிகவும் கடுமையாகப் பேசவேண்டும். மற்றொன்று, அவன்மேல்

பழி சுமத்திப் பேசவேண்டும். அவன் மிகவும் பயங்கொள்ளி என்ற காரணத்தினுல் உண்மையை உள்ளபடி கூறிவிடுவான்'' என்ருள்.

சுமார் பதினைந்து நிமிஷநேரத்தில் ரத்ருகரமும், ஜான் சனும் அங்கு கொண்டுவரப்பட்டனர். ரத்ருகரம் சாக்ஷிக் கூண்டிலேற்றப்பட்டான். நீதிபதி தனது ஸ்தானத்தை மறந்தவர்போல் ஒரு பெரிய முரடன்போலாகி, அவனை நோக்கி,

"மிஸ். சந்திராவை ஜான்சன் தனது துப்பாக்கியால் கொன்றவுடன் அவள் வைத்திருந்த ரூபாய்களை நீர் அபகரித் துக்கொண்டதாக ஜான்சன் சொன்ஞன். அதற்காக உமக்கு தூக்குத்தண்டனை விதிக்கப்போகின்ருேம். என்ன சொல்லு கின்றீர்?'' என்று கொடுமையாய்க் கேட்டார்.

"ஐயோ! அடபாவி! அநியாயக்காரப்பயலே! என்னிடம் என்னென்னவோ கூறி, அவளைக்கொன்று, அவள் சேமித்து வைத்திருந்த பணத்தையும் எடுத்துக்கொண்டு என் பிழைப் பிலும் மண்ணைப் போட்டதுமல்லாமல் எனக்குமா தீங்கு செய்ய முன்வந்தாய்?'' என்று கூறிக் கண்ணீர் வடித்து, "நீதிபதியவர்களே! சத்தியமாக நான் ஒரு செம்புச்சல்லி கூடத்தொடவில்லை. எல்லாம் அந்தப்பாவிப்பயல் தான் எடுத் துக்கொண்டான்'' என்ருன்.

நீதிபதி உண்மையை ஒருவாறு உணர்ந்தவராய், "அப் படியாயின் சரி! அவன் உம்மிடம் கூறிய ஒவ்வொன்றையும் ஒளிக்காமல் கூறினுல் உயிர் பிழைப்பீர்'' என்ருர்.

"நீதிபதியவர்களே! மிஸ். சந்திரா கொலையுண்ட தின த்தன்று, சம்பவம் நிகழும்முன்னுல் ஜான்சன் என்னையணுகி,

தான் மிஸ். சந்திராவைச் சுட்டுக் கொல்லுவதாகவும், அத ற்கு நான் உடன்படாவிட்டால் தீங்கேற்படுமென்றும், உடன் பட்டால் அவளிடமிருக்கும் பணத்தில் பாதி எனக்குத் தரு வதாகவும், அதன்பொருட்டு, நான் போலீசாரிடம் சென்று, அடிமைகள் நிவாரணச் சங்கத்தலைவன் காலக்கதிரவன் மிஸ். சந்திராவைக் கொன்றுவிட்டோடியதாக புகார் சொல்ல வேண்டுமென்றும் சொன்னான். இங்கு ஏற்கனவே தாக்கல் செய்யப்பட்ட கடிதத்தையும் அவனே தான் அங்கு வைத் தான். அவன் கூறியபடி நான் எல்லாவற்றையும் செய்து முடித்தேன். ஆனால், அந்தப்பாவிப்பயல், பணத்தில் பாதி யைத் தருவதற்குள் ஹேமாவதியைக் கற்பழிக்க முனைந்த திற்காக சிறைக்கனுப்பப்பட்டான். சத்தியமாக நான் ஒரு சல்லியும் அனுபவிக்கவில்லை. ஏழை எனக்கு உயிர்ப்பிச்சை யளிக்கவேண்டும்'' என்றான்.

அடுத்ததாக விலங்கிட்டு நின்றிருந்த ஜான்சன் சாக்ஷிக் கூண்டிலேற்றப்பட்டான். அங்குள்ள மக்களைக் கண்ணுற்று வெட்கத்தால் தலைகுனிந்தான். இவனை நோக்கிய நீதிபதி,

"மிஸ். சந்திராவைக் கொன்றது நீதானே?" எனக் கேட்டார்.

ஜான்சன்:—இனி மறைப்பதால் யாதுபயன்? நான்தான் கொன்........றேன்.

நீதிபதி:—கொல்லுவதற்குக்காரணம்?

ஜான்சன்:—அடிமைகளை ஆர்வப்படுத்தினன் காலக்கதிர வன். அவனைத் தொலைப்பதற்கு சதிசெய்து கொலை புரிந்து அக்குற்றத்தை அவன்மேல் சுமத்தலானேன்.

நீதிபதி:—அப்படியாயின் காலக்கதிரவன்?

ஜான்சன்:—அவன் நிரபராதி!

நீதிபதி:—ரத்னாகரம் கூறியது முற்றும் உண்மைதானே?

ஜான்சன்:—ஆம்.

இத்துடன் நீதிபதி தனது விசாரணையை முடித்துக் கொண்டு தீர்ப்பெழுத ஆரம்பித்தார். அந்த நேரத்தில், புத்துயிர் பெற்ற காலக்கதிர்வன் மிஸ். சரோஜினிக்கு வந்தனம் செலுத்துவதுபோல் தனது கருணை நிறைந்த களங்கமற்ற கண்களால் நோக்கினான். அவளும் அதனை ஏற்றுக்கொண்டவள் போல் புன்முறுவல் பூத்தாள். அருகில் நின்றிருந்த ஹேமாவதி, தனது காதலன் தன்னை மீண்டும் அடையப் போகும் பாக்கியம் கிடைத்ததை எண்ணி புளகாங்கிதமடைந்தாள். அங்கு நின்றிருந்த மக்களனைவரும் காலக்கதிரவனுக்கு விடுதலை கிடைக்கப்போவதை யெண்ணி மகிழ்ச்சியுற்றனர். ஜான்சனை வெறுத்து அவதூறாகப் பேசினர். அவனுக்கு விதிப்பதற்கு மாணதண்டனையைக் காட்டிலும் வேறு கொடிய தண்டனை இல்லையே என்று வருந்தினர். பலர் பலப்பல விதமாகப் பேசிக்கொண்டனர்.

தீர்ப்பு எழுதி முடித்த நீதிபதி, "துப்பறியும் மிஸ். சரோஜினி தனது அபார சாமார்த்தியத்தால் உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடித்ததால் நிரபராதியான காலக் கதிரவனுக்கு விடுதலையளிப்பதுடன், இந்நாள்வரை அநீதியாக சிறைவைத்திருந்ததற்கு இக்கோர்ட்டு மிகவும் வருந்துகின்றது.

நிரபராதியான காலக்கதிரவன்மேல் வீண் பழி சுமத்தி அவனைக் கொலைக்குற்றத்திற்காளாக்கியதற்காகவும், மிஸ். சந்திராவைக் கொலைசெய்ததற்காகவும், அவளுடைய பொ

ருளை அபகரித்ததற்காகவும் ஜான்சனுக்குத்தூக்குத்தண்டனை விதிக்கின்றோம்.

ஜான்சனுடைய துர்க்காரியத்திற்கு உடன்பட்டுழைத்ததுமல்லாமல், முதலில் சாக்ஷி கூறியபொழுது உண்மையை ஒளித்ததையும் முன்னிட்டு ரத்னாகரத்திற்கு ஆறுவருடக் கடுங்காவல் தண்டனை விதிக்கின்றோம்'' என்று வாசித்தார்.

அங்கிருந்தோரனைவரும் அகன்றனர். விடுதலைபெற்ற காலக்கதிரவன் வெளிவந்ததும், ''காலக்கதிரவனுக்கு ஜே மிஸ். சரோஜினிக்கு ஜே!'' என்ற ஆரவாரம் எங்கும் நிலவியது. காலக்கதிரவனும், மிஸ். சரோஜினியும், ஹேமாவதியும் அடிமைகள் நிவாரணச்சங்கத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

அங்கு, இந்தியமக்களெல்லோரும் கூடி, மூவருக்கும் சிறந்தமுறையில் உபசாரம் செய்து களைப்புத்தீர ஆவன செய்து மகிழ்ந்தனர்.



## பதினொன்றும் அத்தியாயம்.

தௌலத்தீவின் தூக்குமேடை. மாலை சரியாக ஆறு மணி யிருக்கலாம். அரசரின் அந்தரங்கக் காரியதரிசியான ஜான்சன் கொண்டுவரப்பட்டான். மேடைமீதும் ஏற்றப்பட்டான். இன்னும் ஐந்து நிமிஷ நேரத்தில் உயிர்போய்விடும். பல பல எண்ணினான். ''ஆம்! இனியும் ஏன் நான் யோஜிக்க வேண்டும்? 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்று கூறுவார்கள். ஆனால் சாகப்போகின்ற எனக்கு வேந்தன் துரும்பி

லும் மெல்லியன். இனி நான் ஏன் அவனைப் பொருட்படுத்த வேண்டும்? அந்தரங்கக் காரியதரிசியாக அமர்ந்து பல நற் காரியங்களைச் செய்யத் தூண்டினேன். அவை எல்லாம் எனது நற்காலத்தால் பயனளித்தன. அதேபோல் இந்தியர் களை விரட்ட ஏற்பாடு செய்தேன். அதுவே எனக்கு கூற்று வனாயிற்று! நான் யாருக்காகப் பாடுபட்டேனோ அவன் என்னைக் காப்பாற்ற முன்வரவில்லை. நன்றிகெட்டவன்! அந்தோ! தெய்வமே! என்னை மன்னிப்பாயோ! நான் அடாக் காரியங்கள் பலவற்றைச் செய்தேன்,—கற்பழிக்க முனைந் தேன்,—ஒன்றுமறியாத உத்தமனொருவன்பேரில் வீண் பழி சுமத்தினேன். கொலையும் செய்தேன்! நான் மகாப்பாவி! நான் மகா சண்டாளன்! இந்த அரசனிடம் காட்டிய அன் பிற் பாதியையாயினும், ஏ கருணாநிதே! உன்னிடம் காட்டி யிருப்பேனேயாகில், எனது மதிகெட்டிருக்காது! இந்தக் கேவல நிலையையும் அடைந்திருக்கமாட்டேன்! இனி என் செய்வது? செய்திவினையிருக்கத்தெய்வத்தை நோவதில் பிர யோஜனமென்ன? ஏ தூக்குமேடையே! உற்றார் உறவினர் யாரும் எனக்குச்சதமல்ல! நீதான்சதம்! உன்னால்தான் நான் இனி தீத்தொழில் புரியாமல் தடுக்கப்படுகிறேன்! நீயே எனக்கு உற்ற உயிர்த்துணைவன். இதோ நான் இறக்கத் தயார்!'' என்று தன்னையே மறந்து வாய்விட்டுக் கூறினான். சரியாக மணி ஆறுக்கு அவன் தூக்கப்பட்டு பிணமாய்த் தொங்கினான்.

இது இவ்வாறாக, ஆறு வருடக்கடுங்காவல் தண்டனை யடைந்த ரத்னாகரம் தனது நிலையை நினைந்து, “சேரக்கூடிய இடத்தை நன்றாக அறிந்து ஆராய்ந்து சேரவேண்டும். இல்

லாவிட்டால் நானடைந்த கதிதான் கிடைக்கும். பாழும் பணத்தில் ஆசைகொண்டு, கெட்டவேசிக்கு உடன்பட்டுழைத்து என்றும் மாறாத அவமானத்தையடைந்தேன். கேவலம் பணத்தின் ஆசையால், ஜான்சன் அவளைக் கொல்லவும் இடங்கொடுத்தேன். நீதிஸ்தலத்தில் பொய்யும் புகன்றேன். ஆனால் மெய் வெளிப்பட்டது. நான் தண்டிக்கப்பட்டேன். அழியாக் கேவலம்! மானமழிந்து உயிர்வாழ்வதினும் மரணம் சிலாக்கியமென்றாலோ அதற்கும் இந்தச் சிறையில் ஒரு வழியில்லையே! உயிரைத் தாங்குவது மிகவும் பாரமாகி விட்டது,'' என்றவாறு வருந்தியுழன்றான்.

விடுதலையடைந்த காலக்கதிரவன், மறு நாள் மாலையில் அடிமைகள் நிவாரணச் சங்கத்தில் ஒரு பொதுக்கூட்டம் நடாத்தினான். அவ்வைபவத்திற்கு மிஸ். சரோஜினி தலைமை ஏற்றாள். அத்தீவின்கண் குடியேறிய எல்லா இந்தியர்களும் எவ்வித பேதமுமின்றி விஜயம் செய்திருந்தனர். அத்தீவுச் சுதேசமக்களுள் பல பெரிய பிரமுகர்களும் விஜயம் செய்திருந்தனர்.

இந்த நிலையில் காலக்கதிரவன் மேடைமீதேறினான். எங்கும் கரகோஷமும், 'காலக்கதிரவனுக்கு ஜே' என்ற கோஷமும் வானைப்பிளக்கும் வண்ணம் எழுந்தன. காலக்கதிரவன் அங்கு குழுமியிருந்த ஜனங்களுக்கும் மிஸ். சரோஜினிக்கும் வணக்கம் செய்து,

இந்தியச் சோதர சோதரிகளே!

தௌலத்தீவு கனதனவான்களே!!

இன்று கூட்டப்பட்ட இப்பொதுக்கூட்டம் சாதாரணமானதல்ல! எல்லோரும் சம அந்தஸ்துடன் விளங்கும் கூட்

டம்! மற்றும் நம்மை கேவலமாக நடத்தும் அரசரின் இனத்தவர்களும் கலந்த மாபெரும் கூட்டம்! இதனைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகின்றேன்! சரித்திரத்தின் ஏட்டில் இன்றபக் கூட்டம் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படுமென்பதில் ஐயமில்லை!

சகோதரர்களே! சகோதரிகளே! இந்தத்தௌலத்தீவு நம் இந்தியர்கள் குடிபுகுந்தபின்தான் செழிப்புற்றது என்பதை யாரும் மறக்கவோ அல்லது மறைக்கவோ முடியாது. அப்படியிருக்க, துர் எண்ணம் குடிகொண்ட சுதேசவாசிகளில் பலரின் தூண்டுதலின்பேரில் மன்னர் நம்மை இந்த நாட்டை விட்டுத்துரத்த முனைந்திருப்பது மிக்வும் கேவலமானதாகும்! இந்தப் பிரச்சனைக்கு மூலகாரணமாயிருந்த ஜான்சன் தூக்குண்டபின், அரசர் நம் விஷயத்தில் தீவிரமாக வேலைசெய்து வருவதாகத் தெரிகிறது. நம் நாட்டில் நல்ல தொழிலில்லையா? இந்தியா பொன்விளையும் நாடு! அப்படியிருக்க நாம் மிருகங்களிலும் கேவலமாக நடத்தப்படுவதை ஏன் சகித்துக்கொண்டிருக்கவேண்டும்? என்றால், நமது செல்வத்தை இந்த நாட்டின் சுதேசிகளின் நன்மையையும் நமது லாபத்தையும் கருதி தாராள மனதுடன் முன் பின் அறியாத இந்த சுதேசிகளுக்குக் கொடுத்திருப்பதால் அதனை விட்டுச் செல்ல மனமில்லாமையே யாகும். இப்பொழுது நம்மை விரட்டியோட்ட முனைந்திருக்கும் நம் அரசர் அவையனைத்தையும் நமக்குத் தந்துவிட்டால் இன்றே நமது தாய் நாட்டிற்குச் செல்லத் தயார். ஆனால் அதுதான் நடக்கப்போவதில்லை.

இப்படியான நிலையில் நாம் எப்படிப் போகமுடியும்? சிந்தித்துப் பாருங்கள்! உங்கள் உள்ளத்தில் உணர்ச்

சியை ஊட்டுங்கள்! நமது ஆதரவால் வாழும் இந் நாட்டு சுதேசிகளும் நம்மை நிராகரிப்பவர்கள் போல் அரசரையே பின்பற்றுகின்றனர். ஆதலின், சகோதர சகோதரிகளே! நமது நிலை எப்படியானாலும் ஆகட்டும். நம்மை விரட்ட மனம் கொண்ட இந்த நாட்டு சுதேசிகளுக்கு இனிமேல் ஒரு செம்புக்காசேனும் கொடுத்துதவாதீர்கள். இந்த விஷயத்தில் நீங்களெல்லோரும் ஒற்றுமையாக நில்லுங்கள். பின் என்ன நடக்கிறதென்பதையும் சுதேசிகள் எப்பாடுபடுகிறார்கள் என் பதையும் கவனிப்போம்'' என்று கூறி முடித்தான். எங்கும் கரகோஷமும் திடச்சித்தமும் குடிகொண்டது.

இவ்வாறு காலக்கதிரவன் தம்மக்களுக்கு உணர்ச்சி யூட்டியதைக் கவனித்துக்கொண்டிருந்த அத்தீவின் சுதேச மக்களுள், பெருமையும், கீர்த்தியும், வாக்குவன்மையும் வாய் ந்த ஒருவர் எழுந்து,

“நேசச்சகோதரர்களே! சகோதரிகளே! இப்பொழுது நான் தலைவியின் அனுமதிபெற்று சிலவார்த்தைகள் பேச விரும்புகிறேன். சுதேசமக்களே! கேளுங்கள்!! இந்தியமக்கள் நம் நாட்டில் குடியேறுமுன்பு நாம் வறுமைப்பட்டு வாழ்ந் ததை நீங்கள் நன்கறிவீர்கள். நமது செல்வமும் செழிமை யும் அவர்களால்தான் ஏற்பட்டது. அப்படியிருக்க அவர்க ளுக்கு விரோதமாக எந்தக்காரியத்திலீடுபட்டாலும் பெரும் பாவமாகும். எனவே நீங்கள் எல்லோரும் இந்தியர் வழி நின்று அவர்கள் மனம்போல் நடக்கவேண்டுமென்பதாய்க் கேட்டுக்கொள்ளுகின்றேன். எனது வார்த்தையை நீங்கள் நிராகரிக்கமாட்டீர்களென்பது எனக்குத்தெரியும். என்று லும் இந்தியர்கள் மனது திருப்திப்பட உங்களின் பதிலைத்

தெரிவியுங்கள்'' என்று பேசி, பதிலை எதிர்நோக்கி நிற்க, அங்கு குழுமியிருந்த சுதேசமக்கள் ஒருமித்து, "அப்படியே யாகட்டும்'' என்று கூறினர்.

கூட்டம் ஒருவாறு முடிவடைய, ஹேமாவதி எழுந்து, "நேசமான சகோதரிகளே! சகோதரர்களே! அடிமைகள் நிவாரணச்சங்கத்திற்கு என்னை காரியதரிசியாக இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அதனை மறுக்கமாட்டாமல் ஏற்றுக்கொள்ளவேண்டியவளானேன். அது நிற்க, இன்று ஏழை இந்தியர்களுடன் எத்துறையிலும் ஒத்துழைப்பதாக வாக்குறுதியளித்த இந் நாட்டு சுதேசமக்களுக்கு இச் சங்கத்தின் சார்பாகவும் எனது சொந்த முறையிலும் வணக்கமிடுகிறேன். மற்றும் இங்கு பேதாபேதமின்றி ஒற்றுமைப் பட்ட எல்லோருக்கும் வந்தனமளிக்கின்றேன்'' என்று உப சாரவார்த்தைகள் உரைத்தாள்.

எல்லோரும் எழுந்துசெல்லும் நிலையில் ஒரு அரசாங்கச் சேவகன், சங்கத்தலைவனான காலக்கதிரவனிடம் ஒரு கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்தான். அதனைப் பிரித்த காலக்கதிரவன் படித்துப்பார்த்தான். முகத்தில் கோபாக்கினி வீசியது. அங்குக் குழுமியிருந்த மக்களை நோக்கி,

"அன்புள்ள மக்களே! இந்த அநியாயத்தையும் அட்டூழியத்தையும் எவ்வாறு சகிப்பது? கேட்டீர்களா அரசனின் கட்டளையை!'' என்று கூறி அக்கடிதத்தைப்பிரித்து,

அடிமைகள் நிவாரணச்சங்கத் தலைவனே!

இனி உங்களுக்கு இத்தீவில் இடமில்லை. இந்த அரசாங்கக்கட்டளை கிடைத்த இருபத்துநான்குமணி நேரத்திற்

குள் நீங்களெல்லோரும் வெளியேறிவிடவேண்டும். கட்டளையை நிராகரிப்பீர்களாயின், உங்கள் அனைவரையும் குண்டுக்கு இரையாக்குவோம். முன் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளுங்கள்.

வில்சன்,
தௌலத்தீவு மன்னன்.

என்று வாசித்தான். இதனைக் கேள்வியுற்ற அங்கிருந்தாரனைவரும் வலையில் சிக்கிய மடங்கல்போல் துடிதுடித்தார்கள். நெஞ்சம் குமுற ஆர்ப்பரித்தார்கள். எழுந்தான் காலக்கதிரவன்,

“என்னேசத் தேசபக்தர்களே! ஒன்றுக்கும் அஞ்சற்க! வருவன வருக! இந்நாட்டு சுதேசமக்களில் பெரும்பாலோரின் அன்பும், ஆதரவும் நமக்கிருக்க நாமேன் வருந்தவேண்டும்? நாமெல்லோரும் புரட்சிசெய்வோம். அக்கிரமத்தை ஓட்ட கத்தியின்றி ரத்தமின்றி யுத்தம் செய்வோம். நீங்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து ஒற்றுமைப்பட்டு உங்கள் கடைசிச் சுவாசம் நீங்கும்வரை போர்புரியத் தயாராகுங்கள். வெற்றி நமக்கே! பயம் வேண்டாம்!” என்று கூறினன்.

எல்லோருடைய இதயத்தின் இரத்தமும் பொங்கியெழுந்தது. ஒருமனங் கொண்டனர். சுதேசமக்களில் பெரும்பாலோர் கலந்துகொண்டனர். அடிமைகள் நிவாரணச் சங்கத்திலிருந்து புரக்ஷிக்கோஷ்டி. புறப்பட்டது. முதல்வரிசையின் நடுவில் காலக்கதிரவன் இந்திய தேசியக்கொடியைத் தாங்கி நடந்தான். அவனின் இருமருங்கும் மிஸ். சரோஜினியும் ஹேமாவதியும் நடந்தனர். இவர்களைப் பின்பற்றி வரிசை வரிசையாக எண்ணற்றோர் நடந்தனர். காலக்கதிரவன் ‘அச்சமில்லை! அச்சமில்லை!’ என்ற பாரதியாரின் பாடலைப்பாட,

பின்னடந்தவர்களும் அப்பாடலைத்தொடர்ந்து பாடினர். இக் கோஷ்டியில் சேராத எஞ்சிய சுதேசமக்களும், மிஞ்சிய தலைவர்களும், இக் கோஷ்டியாரின் ஆர்ப்பாட்டத்தால் பயந்து தங்கள் தங்கள் வீட்டினுள் புகுந்து தாளிட்டுக்கொண்டனர். புரக்ஷிக்கோஷ்டியார் நேராக அரசமாளிகையை நோக்கி நடந்தனர்.

இச் செய்தியை அரசர் அறிந்தார். எதிர்பாரா இச் சம்பவத்தால் குலை நடுக்கங்கொண்டார். தனது சேனாபலத்தை நோக்கினர். சேனை வீரர்கள் எங்கோ காணேம்! மெய்க்காப்பாளர்களிலும் ஒரு சிலரேதானிருந்தனர். எனவே, தான் அங்கு பலமின்றித்தங்கியிருந்தால் உயிருக்காபத்தேற்படுமென்றெண்ணி உயிர்தப்ப யோசனை செய்தார்.

தமது நீண்ட அங்கிக்குப் பதிலாக ஒரு சாதாரணச் சட்டையைத் தரித்தார். முடிதாங்கிய சிரசில் சாதாரணக் குல்லாயை அணிந்தார். பீதாம்பரத்திற்குப் பதிலாக கிழிந்த கந்தலுடையை மாட்டினர். ஆபரணவகை யாவையும் முத்திரை மோதிரத்தையும் அகற்றினர். நிலைக்கண்ணுடியில் தனது பிம்பத்தை நோக்கினர். "ஆம்!........ஆம்! வாழ்வும் தாழ்வும் நிலையில்லை! குடை நிழலிருந்து குஞ்சரமூர்ந்தோர் நடைமலிவது வாஸ்தவம்தான் போலும்! எனக்கு நேரிட்டதும் அதுவே!" என்று தன்னுள் எண்ணி, அரண்மனையின் முதலிரண்டு கட்டுகளையும் கடந்து, மூன்றாங்கட்டில் புகுந்து முற்றவாயில் வழியாக எட்டிப்பார்த்தார். அங்கு அப்பொழுதே வந்த புரக்ஷிக்காரரின் எண்ணிக்கையைக்கண்டு, உளம் பதைத்து வெளியில் சென்று தப்பவும் முடியாததற்கு வருந்தினர். ஓர் யோஜனை தோன்ற பின்புறத்தை நோக்கி நடந்தார். தோட்டக்கதவைத் திறந்தார். அங்கு ஒன்றிரண்டு

வேலையாட்கள் நின்றிருப்பதைப் பார்த்தார். ஒருவேளை அவர்கள் தன்னை இன்னாரென அறிந்துகொள்வரோ வென்றெண்ணிப் பயந்தார். ஆயினும் திடங்கொண்டு நடந்தார். அங்கு நின்றிருந்தோர், மாறுவேடத்தில் வருவது உண்மையிலேயே ஒரு வேலைக்காரன் என்றெண்ணி கவனியாது விடுத்தனர். 'தலைதப்பியது தம்பிரான் புண்ணியம்' என்றவாறு தப்பிய மன்னர் செய்வதற்கு குறிப்பிட்டகாரியமோ, செல்வதற்குக் குறிப்பிட்ட இடமோ இன்றி, ஒருவழிப்படாது, தன் கால்களின் போக்கில் மனத்தையும் விடுத்து சுற்றிச் சுற்றி அலைந்தார். எந்த நிமிஷத்திலாவது தனது வேஷத்தை எதிரிகள் அறிந்தால் அவமானமேற்படுவது திண்ணமென்றெண்ணி பலபல யோசனைகள் செய்தார்.

இவர் இவ்வாறாக, புரக்ஷிக்காரர்கள் அரண்மனையின் வாயற்புறத்தையடைந்ததும், பலர் மதிற்சுவரின்மேலேறித் தகர்த்தனர். பலர் கூரையைப் பிரித்தனர். பலர் கதவுகளை உடைத்தனர். இவ்வாறாக, அரண்மனையில் நாற்புறமும் புரக்ஷிக்காரர்கள் சூழ்ந்து நாசஞ்செய்யலாயினர். இவர்களை எதிர்ப்போர் எவருமில்லை. ஜெயக்கொடி நாட்டினர். எங்கும் 'காலக்கதிரவனுக்கு ஜே!' என்ற கோஷமும், 'அடிமைகளுக்கு ஜே!' என்ற கோஷமும் வானைப்பிளக்கும் வண்ணம் எழுந்தன.

இவ்வாறான நிலையில் காலக்கதிரவனின் மனம், அரசனைக் காணவேண்டுமென்பதிலும், கண்டு புத்தி புகட்டவேண்டுமென்பதிலும் முனைந்து நின்றது. ஆனால் அரசனைக்காணுவதெங்ஙனம்? முயற்சி தளர்ந்தான். நிற்க, வெளிச்சென்ற அரசரை நோக்குவோம்.

தனதரான்மனே புரக்ஷிக்காரர் வசமாயிற்றென்பதையும், காலக்கதிரவன் தன்னைக் கண்டுபிடிக்க முனைந்திருக்கிறுனெ ன்பதையும் அறிந்த அரசர், இனி இருப்பதிலும் இறப்பது தான் மேலென எண்ணி நீல நிறக்கடலோரம் நடந்தார். சமுத்திரத்தை உற்றுநோக்கினர். அலைகளைக்கண்டு பயந்தார். "ஆ! வெட்கம்! வெட்கம்! சாகத்துணிந்து சமுத்திரத்தை யடைந்த நான் அலைகளைக்கண்டஞ்சுதல் அபலைத்தனமன்றோ! நான் செய்த தீவினைப்பயனை அனுபவித்தேயாகவேண்டும்! கூடா நட்பால் ஏற்பட்டகொடுமை! அந்தோ! வெல்வெட்டுக் கம்பளத்தில் நடந்த நான் கல்லிலும் முள்ளிலும் நடக்கிறேன்! வாகனங்களில் ஊர்ந்த நான் கால்நடையாக நடக்கிறேன்! பலரைப் பயந்தோடச் செய்த நான் பலருக்குப் பயந்தோடுகிறேன்! வாழ்வு நிலையற்றது! ஏ உலகமே! என்னைப்பார்த்தாகிலும் சீர்திருந்துவாயாக!" என்று கூறி கடலில் வீழ்ந்தார். அரசரை ஆழிகொண்டது.

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

தௌலத்தீவு புரக்ஷிக்காரர் வசமாயிற்று. ஒரு சாரார் காலக்கதிரவனுக்கு முடிசூட்ட எண்ணினர். மற்றொரு சாரார், சுதேசிகளிடமிருந்து கைப்பற்றிய ராஜ்யத்திற்கு ஒரு சுதேசியை மன்னனுக்குதல்தான் நீதி எனச் சாற்றினர். எனவே இரு பகுதியினர்களும் ஒருமித்துத் தேர்தல் நடத்துவதென்றும், தேர்தலில் வெற்றி பெற்றவருக்கு முடிசூட்டுவதென்றும், தோல்வியடைபவரை அரசனுக்கு அந்தரங்கக் காரியதரிசியாக ஆக்குவதென்றும் தீர்மானித்தனர்.

தௌலத்தீவின் வெள்ளைச் சுவர்களிலெல்லாம், "தயவு செய்து காலக்கதிரவனுக்கு 'ஒட்' செய்யுங்கள்" என்றும்

தயவு செய்து குணரத்தினத்திற்கு 'ஓட்' செய்யுங்கள்'' என்றும் விளம்பரம் செய்யப்பட்டிருந்தது. எனவே, வாசகர்கள் காலக்கதிரவன் ஒரு அபேக்ஷகனென்றும், குணரத்தினம் மற்றொரு அபேக்ஷகனென்றும் அறிவீர்கள். ஆங்காங்கே தேர்தல் பிரசாரங்கள் நடத்தப்பட்டன. இவ்வாறான கூட்டங்களிலொன்றில் ஒரு இளைஞன்,

"தேசமக்களே! இந்தியர்களே! பொதுஜன நன்மையை உத்தேசித்து சில வார்த்தைகள் கூறுகின்றேன். தேர்ந்தெடுக்கும் சுதந்திரமுள்ள நீங்கள் அபேக்ஷகர்களின் குண குணங்களை அறிந்து நாட்டுக்கு நன்மை செய்கிறவரைத்தேர்ந்தெடுக்க வேண்டுவதே உங்கள் கடமை. இதனை வலியுறுத்திக் கூறவே இக் கூட்டம் கூட்டப்பட்டது. ஆதலின், அன்பர்களே! நன்றாக ஆய்ந்தோய்ந்து உங்களின் கடமையைச் செய்யுங்கள்'' என்று கூறினான்.

மறுநாட் காலையில் ஓட்டுகள் போடப்பட்டன. மாலை ஆறு மணிக்கு பெட்டி உடைக்கப்பட்டது. ஓட்டுக்கள் எண்ணப்பட்டன. அங்கு குழுமியிருந்த மக்கள் தங்கள் தங்கள் கக்ஷி வெற்றிபெறவேண்டுமென்று எண்ணியவண்ணம் முடிவை எதிர்நோக்கி நின்றனர். இரவு எட்டுமணிக்கு ஓட்டுக்களின் எண்ணிக்கைமுடிவடைந்தது. அதிகப்படியான ஓட்டுகளின் மூலம் காலக்கதிரவன் வெற்றிபெற்றான். ஜனங்கள் ,'காலக்கதிரவனுக்கு ஜே! ஜே!! ஜே!!!'' என்று தொண்டை கிழிய ஆர்ப்பரித்தனர். தோல்வியடைந்த குணரத்தினம் காலக்கதிரவனுடன் கைகுலுக்கி, "மிக்க சந்தோஷம்'' என்று கூறி, அங்கு குழுமியிருந்த மக்களை நோக்கி, "ஏ மகாஜனங்களே! உங்களின் அதிர்ஷ்டவசத்தால் காலக்கதிரவன் வெற்றிபெற்றார்கள். இனி அவரே நம் அதிபதி. நாளைக்காலை

பத்து மணிக்கு முடிசூட்டுவிழா நடத்துவோம்" என்று கூறினன். மீண்டும், "காலக்கதிரவனுக்கு ஜே!" என்ற கோஷம் பன்முறை கிளம்பியது.

தௌலத்தீவின் அரண்மனை சீர்திருத்தி செப்பனிடப் பட்டு கண்கொள்ளாவிதமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஜனங்கள் திரள் திரளாகப் போய்வந்து கொண்டிருந்தனர். எங்கும் வாத்தியங்கள் 'ஜாம் ஜாம்' என்று முழங்கின. முடி சூட்டு விழா நேரம் நெருங்க நெருங்க மக்கள் மிகுந்த பரபரப்புடனும், காலக்கதிரவனைக் காண ஆவல் கொண்டவர்கள் போலவும் தோன்றினர். காலை சரியாகப் பத்துமணி. சிறிது தூரத்தில் "ஜே! ஜே!!" என்ற கோஷம் செவிடுபடக் கிளம்பியது. எல்லோரும் அக் கோஷம் வரும் திக்கு நோக்கிப் பார்த்தனர். தூரத்திலிருந்தோர் அருகில் ஓடினர். ஆம்! எதிர் கொண்டு நின்ற மனிதன்,—இல்லை,—வருங்கால மன்னன்,—காலக்கதிரவன் வந்துகொண்டிருக்கிறன். பற்பல படைகளின் பின்பு ஆயுதபாணிகளான மெய்க்காப்பாளர்கள் நடந்தனர். அடுத்து, ஒரு ரோல்ஸ்ராய்ஸ்வண்டியில் காலக்கதிரவனும் அவன் மனைவி ஹேமாவதியும் கம்பீரத்துடன் வந்தனர். இதற்குப்பின் பல மெய்க்காப்பாளர்கள் நடந்தனர். அதற்குப் பின்னெருவண்டியில் மிஸ். சரோஜினி சென்றுள். அடுத்தவொருவண்டியில் குமாரத்தினம் சென்றுன். பின்னும் பின்னும் பிரபல பிரமுகர்கள் சென்றனர். இவ்வாருன மா பெரும் கூழாம் அரண்மனையை யணுகியது. எல்லோரும் உள்ளே சென்றனர்.

இந்த நிலையில் வரவேற்க நின்றிருந்தவர்கள் மலர்மாலைகள் சூட்டினர். ஒரு பெரியவர் காலக்கதிரவனுக்கு முடிசூட்டினர். காலக்கதிரவன், எல்லோரையும் நமஸ்கரித்து,

"சகோதரர்களே! சகோதரிகளே! 'அக்கிரமம் அழியும். நியாயம் நிலவும்.' என்பதை நீங்களும் நானும் கண்ணாரக் கண்டோம். குடிஜனங்களின் நன்மையைக்கொண்டு காவல் செய்பவனே காவலன்! 'மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி' என்பதே நீதி! எனவே மக்கள் நல்வழிப்பட மன்னவன் அவ்வழிப் புகவேண்டியதே நேர்மை! ஆதலின் உங்கள் ஆதரவால் செவ்விய முறையில் சிறந்த துறையில் மனுநீதி தவறுமல் ஆக்ஷிபுரியத்தவறிடேன்! எனது எண்ணத்திற்கு ஆண்டவன் அருள்பாலிக்கட்டும்" என்ருன். எங்கும் ஒரே குதூகலம் குடிகொண்டது.

இந்தச் சந்தர்ப்பத்தில்,"சிவ! சிவ! சம்போ! மகாதேவ!" என்ற வார்த்தைகளுடன் ஜடைமுடி தாங்கிய ஒரு முனிவர் அங்குவர, காலக்கதிரவன் வரவுகூறி ஆசனங்கொடுத்தமரச் செய்து, "முனிவ! இல்லற மாகிய நல்லறமிருக்க, துறவறம் பூண்டதேன்?" எனக்கேட்டான்.

முனிவர்:—அரசே! அது பெரும் கதை! கேட்டால் உமது சித்தமும் கலங்கும்.

அரசன்:—சிரேஷ்டரே! அதுபற்றிய சிந்தனை வேண்டாம். கூறுங்கள்.

முனிவர்:—வேந்தே! ஆலகால விஷத்தை நம்பலாம், ஆனல் சேலைகட்டிய மாதரை நம்பினல் தெருவில் நின்றலைய நேரிடுமென்பது மெய்ப்பிக்கக்கண்டேன். அவ்வாருன பொழுது, இல்லறத்திலும் துறவறமே மேலென்றெண்ணி தவவேட மேற்றேன்.

அரசன்:—தவசியே! விளங்கக்கூறுங்கள்.

முனிவர்:—"நான் பிறந்தது குபேரக்குடி. தனவணிக மரபி லுதித்தவன். எனது முதல்மனைவி ஒரு பாலனையீன்று பரலோகம் சென்ருள்." என்று மேலே கூறமாட்டாமல் கண்ணீருகுத்தார்.

அரசன்:—முனிவரே! கலங்காது கூறுங்கள். அம்மைந்தன் பெயர் என்ன? மற்றவிபரமென்ன?

முனிவர்:—'ஜெய....சுந்....தரன்' என்று கூறி மூர்ச்சித்தார். அரசன் மனங்கலங்கினுன். ஆயினும் ஒருவாறு தேறி, "ஐய! பின் என்ன?" எனக் கேட்டான்.

"வேந்தே! மதியிழந்து மறுமணம் செய்துகொண்டேன்! அவள் மையலில் சிக்கி, அவள் சுமத்திய வீண்பழியால் என் அருமந்த மகனை நாட்டைவிட்டுப்போகும்படி செய்தேன். அவன் நிலையாதாயிற்ரென்று அறிகிலேன். சிங்கப்பூரில் செய்து வந்த வேலைதேவி பாழ்பட்டது. இளைய மனைவி இளமையின் எழிலால் கற்பிழந்தாள். எனவே இல்லறத்தைத் துறந்து துறவறங்கொண்டேன்" என்றுகூறி யளமளவென்றழுதார்.

இதுகாறும் சற்று அமைதியுடன் கேட்டுக்கொண்டிரு ந்த மன்னன், கதறியழுது, சிங்காதனத்தினின்றும் கீழிற ங்கி முனிவரைக் கட்டிக்கொண்டு, "ஆ! அப்பா! தாங்களா தவவேடம் கொண்டீர்கள்!" என்று கலங்கினுன்.

ஒன்றுமறியாத முனிவர் வியப்புற்று, "அரசே! இதன் உண்மை என்ன?" என்று கேட்க,

"அப்பா! இன்னும் அறிந்துகொள்ளவில்லையா? நான் தான் தங்கள் மைந்தன் ஜெயசுந்தரன்" என்று கூறி தனது வாழ்வில் நிகழ்ந்த சம்பவங்களனைத்தையும் கூறினுன். முனி வர் தனது பாக்கியத்திற்காகக் கடவுளை வாழ்த்தினர்.

இது இவ்வாறு முடிய, மற்றொரு அழகிய ஆனால் வயது கடந்த மாது அவையை அணுகினாள். இவளைக் கண்ணுற்ற அரசன், "அம்மா! தாங்கள் யார்? இங்கு வந்த காரணம்?" என வினவ, "அரசே! நான் கற்பற்ற ஒரு காதகி! கும்பகோ குடி தாசி மோஹனம்பாள் என்பது எனது பெயர். என்னை யும் என் தொழிலையும் வெறுத்து தனது கற்பைக் காப்பாற் றிக்கொள்ளும் பொருட்டு வெளிப்பட்ட எனது மகள் ஜெய வதனியைத் தேடி ஊர் ஊராய் அலைகின்றேன். அக்காரிய மாகவே இவ்வூருக்கும் வந்தேன். கையில் ஒன்றுமில்லை. பசி பிராணனை வாங்குகின்றது. ஆதலின்..." என்று மேலே கூற முனைந்தபொழுது,

ஹேமாவதி குறுக்கிட்டு, "அம்மா!" என்றழைத்து அவளை உற்று நோக்க, ஒன்றும் விளங்காத வந்தமாது வியப் புற்று, "என்ன!" என்றாள். "இன்னும் தெரிந்திலையோ? உமது புத்திரி ஜெயவதனி நான்தான்" என்றாள். பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?

அன்பர்களே! நாவல் உலகத்தில் நமது காலக்கதிரவ னின் ஆக்ஷியிலுள்ள தெளலத்தீவு ஏனைய தேச அரசாங்கங் களுக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்குவதாகப் பிரஸ்தா பம்.

## எமது வந்தனம்.

அன்புடையீர்காள்!

இதுபோழ்து நமது நாடு இருக்கும் நிலையில் இந்தியரா கப் பிறந்த ஒவ்வொருவரும் இயன்ற அளவு தொண்டாற்ற வேண்டும் என்ற ஓர் உணர்ச்சி எம்மைப்பலகாலமாகத் தூண்

டியது. ஆனால் ஆண்டில் சிறிய நாம் எவ்வகைத் தொண்டா ற்றவியலும் எனச் சிந்தித்தகாலேயில், நவீனவாயிலாக நல்லு ரைகளைப் புகட்டுவது எளிது எனக்கருதி, "கமலகாந்தா" என்ற நவீன மொன்றை எழுதினோம். அதனை அன்பர்கள் தமிழரசில் கண்ணுறுவீர்கள். அடுத்த இந்நவீனம், அன்பர் அழ. சித. வீரப்ப செட்டியாரவர்களின் வேண்டுதலுக்கிண ங்க, ஆயிரம் பிரதிகளை மட்டும் புத்தகரூபமாக அச்சிட்டுக் கொள்ளும் உரிமையுடன் அளிக்கப்பட்டுள்ளது. எம்மை விரும்பிக்கேட்டு வெளியிட்ட அன்னாருக்கும், குற்றம் நீக்கி குணம்கொண்ட உங்கட்கும் எமது வந்தனம்.

இந்நவீனத்திற்கு முன்னுரை அளித்துள்ள வித்வத் திலகம் வாசுதேவ ஐயரவர்களை, பண்டிதர்கள் பலர் நன் குணர்வர். அவர்கள் கள்ளங்கபடற்ற வெள்ளை உள்ளத்தவர். உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசா உத்தமர். எனவே முன்னுரை கேட்கலானோம். இல்லை யென்னாது யீந்தமைக்கு அன்னாருக்கு எமது ஆழ்ந்தவந்தனம்.

இக்கதையை நாடகரூபமாக நடிக்கவோ, அன்றி வெள் ளித்திரைக்குக் கொண்டுவரவோ, அன்றி வேறு உரிமை களைப்பெறவோ விரும்பும் அன்பர்கள் எமது அனுமதி பெற வேண்டுவதவசியமென்பதை வலியுறுத்துகின்றோம்.

வந்தனம்.

தங்களன்புள்ள,

(Sd) V. இராமநாதன்.

தேவகோட்டை.

